யுற்றது. தடிகைபாடியும் இராசராசனுக்குத் தலைவணங்கி நின்றது. அடுத்துக் கொல்லம் படையெடுப்பு ; கொடுங்கோளூர் மீது போர் ! இரு நாடுகளையும் அடக்கிக் 'கீர்த்திப்பராக்கிரமச் சோழன்' என்ற பட்டத்தைப் பெற்றான் இராசராசன். மேலைக் கடற்கரையோரத்து மன்னர்கள் அனைவரையும் அடக்க முனைந்து, இராசேந்திரன் படைகொண்டு சென்று, துளுவர், கொங்கணர் ஆகியோரைச் சிறைப் பிடித்தும், சேரரையும் தெலுங்கரையும் முறியடித்தும் சோழ பூமிக்கு ஒப்பற்ற வெற்றியைத் தேடிக் கொடுத்தான்.

ஈழப்படையெடுப்பில் இராசராசன் பெற்ற வெற்றியின் அறிகுறியாக வட இலங்கைக்கு 'மும்முடிச் சோழ மண்டலம்' எனப் பெயர் சூட்டினான். இந்தப் போரில் அனுராதபுரம் ஆக்கம் அழிந்தது. ''போலனருவா'' என்ற இடத்தைச் சோழர் தலைநகராக இலங்கையில் அமைத்துக் கொண்டான் இராசராசன்.

''இராமன் இலங்கை செல்வதற்குக் குரங்குகளைக் கொண்டு பாலம் கட்டினான். ஆனால், இராசராசன் பாலம் கட்டாமல் படைகளைக் கப்பல்கள் மூலமாகக் கொண்டுசென்று, இலங்கை வேந்தனைக் கொன்றான். இதனால் இவன் இராமனைவிடச் சிறந்தவன்'' என்று திருவாலங்காட்டுப் பட்டயம் பகர்கின்றது.

மேலைச் சாளுக்கியப் பகுதியான இரட்டப்பாடியில் சத்தியாங்ரயன் என்ற பலம் வாய்ந்த மன்னனை இராசராசன் எதிர்த்துக் கடுமையாகப் போரிட்டான். அதில் சத்தியாங்ரயன் புறமுதுகிட்டுப் பதுங்கிவிட்டான். என்றாலும் நாட்டை இழந்துவிடவில்லை. இராசராசன் இரட்டப்பாடி போர் மூலம் மிகுந்த பொன்னும் பொருளும் அடையப் பெற்றான். அந்த அளவற்ற செல்வத்தைக் கொண்டுவந்துதான் தஞ்சைப் பெரிய கோயிலைக் கட்டத் தொடங்கினான். முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரமும் கைப்பற்றி, 'மும்முடிச் சோழன்' என்ற புகழ்மாலையும் பெற்ற இராசராசனது வெற்றித் தூண் போல நிற்பதுதான் தஞ்சை இராசராசேச்சுரம் எனும் கலைக்கோயில் !

இராசராசனின் ஈடும் எடுப்பும் அற்ற வீரத்தோற்றம்போலவே அந்தக் கோயிலும் நிமிர்ந்து நின்று, பழந்தமிழ்ப் பெருவீரனின் போர்ப்பரணியையும் கலை முழக்கத்தையும் அரசியல் பேரொளியையும் அவனிக்கு அறிவித்துக்கொண்டிருக்கிறது.

அந்தக் கோயிலை எழுப்புவதற்கு இராசராசன் தீட்டிய திட்டங்கள் எத்தனை ; எத்தனை ! அவன் எண்ணங்கள் அத்தனையும் நிறைவேறியனவா ? அந்தக் கலைக்கோயிலில் அவன் காண வேண்டுமென்று விரும்பிய அனைத்தும் பூர்த்தி செய்யப்பட்டு விட்டனவா? இல்லை! அவன் எண்ணம் முழுதும் ஈடேறவில்லை !

ஏன் ஈடேறவில்லை ?

அந்தக் கேள்விக்குப் பதில்தான் இந்தக் கதை !

**கோ**யில் திருப்பணியைப் பொறுப் பேற்று நடத்திக்கொண்டிருப்பவன் கண் டராதித்தன் என்னும் பேரதிகாரி. இராசராசனின் சிற்றப்பாவான மதுராந் தகச் சோழனின் மகன்தான் கண்டராதித் தன். கண்டராதித்தனே ஒரு நாள் அழைத்து அரசனும், இராசேந்திரனும், இராசராசனின் அக்காள் குந்தவையாரும்



கோயில் எவ்வாறு அமைக்கப்படவேண்டும் என்பதுபற்றித் தீவிர மாக யோசிக்கத் தொடங்கினார்கள்.

குந்தவையார், கோயிலுக்கு இராசராசேச்சுரம் என்னும் பெயரே வழங்கப்பட வேண்டுமென்று கருத்து அறிவித்தார்.

''கோயிலுக்கு ஏழு வாயில்கள் அமைக்கப்பட வேண்டும். அங்குப் பதினான்கு வாயிற்காவலர் சிலைகள் அமைக்க வேண்டும்'' என்றான் இராசேந்திரன்.

''இராசேந்திரனுக்கு எப்போதும் பாதுகாப்பைப் பற்றித்தான் அக்கறை! இராசேந்திரா! சிலைகள் கோயிலைப் பாதுகாக்குமா?'' என்று சிரித்துக்கொண்டே கேட்டான் மன்னன்.

''சிலைகளை நாம் பாதுகாக்க வேண்டும் என்று எனக்குத் தெரியும். இருந்தாலும் அழகுக்காக இருக்கட்டும் என்றுசொன்னேன்.''

—என்று பதில் கூறினான் இளவரசன். அவன் ஆசை ஒப்புக் கொள்ளப்பட்டது.

''தோரணவாயில், திருமாளிகை வாயில், திருஅணுக்கன் வாயில் என்று மூன்று வாசல்களையும் பழைய முறைப்படியே அமைத்துவிடலாம் அல்லவா?'' என்று கண்டராதித்தன் கேட்டான். மன்னன் 'சரி' என்று தலையசைத்தான். அதற்குள் குந்தவையார் குறுக்கிட்டு, ''இல்லை; இல்லை. அந்த வாசல் பெயர்களில் மாற்றம் வேண்டும். இராசராசன், கேரளர்களுக்கு எமனைப் போன்றவன் என்பதற்கு அடையாளமாக முதற்கோபுர வாயிலுக்குக் கேரளாந்தகன் வாசல் என்றும், இரண்டாவது கோபுர வாசலை இராசராசன் திருவாசல் என்றும் அழைக்க வேண்டும்'' என்று கூறினார். அக்காளின் பேச்சை மறுத்துப் பேசிப் பழக்க மில்லாத இராசராசனும் வாளாயிருந்துவிட்டான்.

''கர்ப்பக்கிரகத்துக்கு மேலேயுள்ள விமானத்தை நல்ல உயரத்திலும் பதின்மூன்று கோபுர மாடிகள் கொண்டதாகவும் அமைக்கத் திட்டமிட்டிருக்கிறேன்'' என்று கண்டராதித்தன் கூறியதை அனைவரும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டார்கள்.

''அந்த விமானக் கோபுரத்தின் உச்சியில் வைக்கப்படும் ஸ்தூபிக்குடம் மூவாயிரம் பலம் எடையுள்ள செப்புக்குடமாக இருக்க வேண்டும். அதன்மேல் சுமார் மூவாயிரம் கழஞ்சு நிறையுள்ள பொன்தகடு போர்த்த வேண்டும்.''

இராசராசன் இந்த ஆசையை வெளியிட்டபோது, குந்தவையார் புன்னகையை நெளியவிட்டுத் தன் தம்பியை அருள் ஒழுகும் கண்களால் ஆசைதீரப் பார்த்துப் பரவசமுற்றார்.

''கோயிலில் சோழப் பேரரசின் சிறப்புக் குறிப்புக்கள்-வெற்றிச் செய்திகள் தாங்கிய கல்வெட்டுக்கள் செதுக்க ஏற்பாடு செய்ய வேண்டும்'' என்று குந்தவையார் கூறினார்.

''சிற்பிகளிடம் கூறி, கோயில் விமானத்தின் நிழல் தரையில்

விழாதவாறு அத்துணை அற்புதமாக அமைக்கச் சொல்ல வேண்டும்'' என்று உற்சாகத்துடன் கருத்தறிவித்தான் இராசேந்திரன்.

''சிற்பிகள் என்றதும் நினைவு வந்தது ; கண்டராதித்தா ! எனக்கு நெடுநாளைய ஆசை ! அதை அந்தக்கோயிலில் நிறைவேற்றியாக வேண்டும்'' என்று பரபரப்புடன் தொடங்கினுன் மன்னன். அனைவரும் அவனையே பார்த்துக்கொண்டிருந்தனர்.

''ஆண்டவன் ஆடியதாக உள்ள திருத்தாண்டவம் இருக்கிறதே....''

—என்று அவன் முடிப்பதற்குள், ''அதென்னப்பா ; அதை ஆண்டவன்தாஞ ஆட முடியும் ? எத்தனையோ ஆரணங்குகள் ஆடுகிருர்கள்!''

— என்று குறுக்கிட்டான் இராசேந்திரன்.

''இராசேந்திரா ! உன் குறும்புமட்டும் போகாது ! நான் கலைத்துவத்தோடு அந்தத் தாண்டவத்தைப் பார்க்கிறேன். அது ஓர் உன்னதக்கலை ! இந்நேரம் உன் மனைவி பஞ்சவன்மாதேவியிருந்தால் என் பக்கம் சேர்ந்துகொண்டு உன்னைத் தாக்கியிருப்பாள் !'' என்று செல்லக் கோபம் காட்டினுன் மன்னன்.

''இப்போதுதான் என்ன ? அவள் மும்முடிச் சோழபுரத்திற்குத்தான் போயிருக்கிருள். போய் அழைத்து வரட்டுமா ?''

—இது இராசேந்திரனின் கேள்வி.

அதற்குள் குந்தவையார்,

''இல்லை, இல்லை. அவள் நாளைக்கு வந்துவிடுவாள். அதுவரையில் உங்கள் வாதத்தை ஒத்திவையுங்கள் !'' என்ருர் சிரித்துக் கொண்டே !

''அத்தை ! எனக்குக் கலையார்வம் இல்லை என்கிருரே, அப்பா ! நீங்கள் நம்புகிறீர்களா ?''

இராசேந்திரன் குந்தவையாரிடம் அன்பொழுகக் கேட்டான்.

''சே, சே ! யார் சொன்னது ? உன் மனைவி பஞ்சவன்மாதேவி ஆடுவதும் நீ பாடுவதும் எத்தனையோ முறை என் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறது.''

இராசேந்திரன் வெட்கத்தால் தலைகுனிந்துகொண்டான், குந்தவையாரின் கேலி கண்டு.

''சரி, சரி ! நீங்கள் இடையே குறுக்கிட்டு நான் சொல்ல வந்ததை மறந்துவிடப் போகிறேன். கண்டராதித்தா ! இறைவனின் ஏழுவகை ஆடல்களில் எனக்கு அதிக ஈடுபாடு உண்டு என்பது தான் எல்லாருக்கும் தெரியுமே ! நாம் கட்ட இருக்கும் கோயில் மேல்தளத்தின் உட்பாகத்து அடிவரிசையில் இறைவனது தாண்டவங்களைச் சிற்பங்களாகச் செதுக்க ஏற்பாடு செய்ய வேண்டும். நூற்றெட்டு நடை நிலைகளை நூற்றெட்டுச் சிற்பங்களாக அமைத்திட வேண்டும். ஒவ்வொரு சிற்பத்திலும் கலையின் உயிர்ப்பும்

துடிப்பும் மிளிர்ந்திட வேண்டும். அந்தச் சிற்பங்களை உருவாக்குவதற்கு எவ்வளவு பொருள் செலவானாலும் பரவாயில்லை. திறமை மிக்க சிற்பி யொருவனை இப்போதே தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும். இந்த என் ஆசையை நிறைவு செய்யவேண்டியது நின் தலையாய பொறுப்பாகும்.''

என்று இராசராசன் மிக்க உணர்ச்சியுடன் கூறினான். நூற்றெட்டுக் கலைச்சிற்பங்களை அமைப்பதிலே மன்னன் காட்டுகின்ற அளப்பரிய அக்கறை கண்டு குந்தவையாரும், இராசேந்திரனும் ஒருவரை யொருவர் வியப்புடன் பார்த்துக்கொண்டனர்.

கோயில் எழுப்புவதற்கான மேலும் பல திட்டவட்டமான யோசனைகளை வெளியிட்ட பிறகு, ஆக்கப்பணியில் இறங்குவதாக உறுதி கூறி, கண்டராதித்தன் விடை பெற்றுக்கொண்டான். அதன் பின் அரசன், சேனாதிபதி கிருஷ்ணன் இராமனை மும்முடிச் சோழப் பிரமராயனை அழைத்து, கோயிலுக்கான திருச்சுற்று மாளிகை எழுப்பும் பொறுப்பை அவனிடம் ஒப்படைத்தான்.

கண்டராதித்தனும் பிரமராயனும் இராசராசேச்சுரத்தை நாலைந்து ஆண்டுகளுக்குள் உருவாக்கிவிட வேண்டுமென்றே ஆவலுள்ளக் காரியத்தில் இறங்கினர். நாடெங்கணுமிருந்து திறமை மிக்கச் சிற்பிகள் வரவழைக்கப்பட்டார்கள். கற்கள் மலைமலையாகக் குவிக்கப்பட்டன. கோயில் காரியங்கள் குறைவின்றி நடைபெறுவதற்காக முப்பத்தைந்து ஊர்களைத் தேவதானச்சிற்றூர்கள் என்ற பெயரால் கோயிலுக்குக் கல்வெட்டு மூலம் அரசன் அளித்தான். கோயிற்பணிகள் குறைவற நடைபெற நானூறு தேவ மாதர்கள் கோயிலைச் சுற்றி வடக்கிலும் தெற்கிலுமாகக் குடியேற்றப்பட்டனர். அந்த மாதர்களில் ஆடல் பாடல்களிலும் வல்லவர்கள் இருந்தார்கள். கோயில் சேவைக்கெனக் கொட்டி மத்தளக்காரர், வீணை வாசிப்பவர், மொரலியம், வங்கியம், பாடலியம், உடுக்கை, முத்திரைச் சங்கம் முழங்குவோர், உவச்சுப் பறை, சகடை, கரடிகை என்னும் பறைக் கருவிகள் வாசிப்போர் அனைவரும் தருவிக்கப்பட்டனர். அவர்களுக்குத் தனித்தனியே ஒவ்வொரு வேலி நிலம் நிபந்தம் அளிக்கப்பட்டது. கோயில் பண்டாரிகள், கணக்கர், திருவிளக்கிடுவலார், மாலைகட்டி, மெய்க்காவலர், தச்சர், கன்னார் எனப்படும் துறையினரும் அமர்த்தப்பட்டனர். கோயில் வேலை முழுவதும் முடிவதற்குள்ளாகவே கோயிலுக்குத் தேவையான பொருள்களையும் சேகரித்துச் சிறப்புச் செய்வித்தான் அரசன்.

தஞ்சை மாதாவின் மடியில் காலூன்றி எழும் சோழப் பேரரசின் வெற்றிக் கலைச் சின்னத்தைக் காண்பதற்கு நாட்டின் பல பாகங்களிலுமிருந்தும் நாள்தோறும் ஏராளமானவர்கள் தஞ்சையில் கூடினார்கள். தினந்தோறும் திருவிழா எனத் தக்க வகையில் விளங்கிற்றுச் சோழனின் தலைமை நகரம்.

அந்த மகத்தான காட்சியைக்காண வருபவர்கள் கடல் அலை போல் கூட்டம் கூட்டமாக வந்து திரும்பிக்கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு நாளும் புதிய புதிய ஊர்க்காரர்கள் தஞ்சையைச் சூழ்ந்துகொண்டு கோயிலின் வளர்ச்சியைக் கவனித்துச் சென்றனர்.

ஒரு நரை மூதாட்டி மட்டும் நாள் தவருமல், அந்தி சாயும் நேரத்தில் ஆலயம் கட்டப்படும் இடத்திற்குச் சிறிது தொலைவில் வந்து நின்று, இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தாள். அவளைச் சுற்றிச் சில ஆடுகள் நிற்கும். பின்னர், பொழுது நன்ருகப் போனதும் அவள் ஆடுகளுடன் திரும்பிப் போய் விடுவாள்.

நரை விழுந்த கூந்தல் எனினும் அதனை வாரி ஒழுங்காக முடித்திருந்தாள், வயது எழுபதை எட்டிப் பிடித்திருக்கும். ஆனால் அவள் நிற்பதற்குக் கம்பைப் பிடித்துக் கொள்ளவில்லை ; நன்ருக உழைத்த உடம்பு என்பது பார்த்தவுடனேயே தெரிந்தது. கொஞ்சம் கொஞ்சமாக விண்ணேக்கி உயர்கிற இராசராசேச்சுரத்தைப் பார்க்கும் அவளது சுருங்கிய முகத்தில் ஒருவித மலர்ச்சி ஏற்படும். தொலைவிலே நின்றுகூட அவளால் சிற்பிகளும் ஏனையப் பணியாளர்களும் நடத்துகிற வேலைகளைத் தெளிவாகப் பார்க்க முடிந்தது. தினந்தோறும் அந்தக் கிழவி வருவதையும் மிகுந்த உற்சாகத்துடன் திருப்பணியைப் பார்வையிடுவதையும் கண்ட சிற்பிகள் சிலர் ஒரு நாள் அவளை நெருங்கிப் பேச்சுக் கொடுக்கத் தொடங்கினர்.

அவள் ஆடு வளர்ப்பதைத் தொழிலாகக் கொண்டவள். பெயர் அழகி. தஞ்சைக்கு அருகே நாலு கல் தொலைவிலுள்ள குக்கிராமத்தில் வாழ்கிருள்.

இந்த விவரங்களைச் சிற்பிகள் கேட்டறிந்தனர்.

''உனக்கேன் பாட்டி இந்த வயதில் இவ்வளவு ஆர்வம் ?''

ஓர் இளம் சிற்பி சற்றுக் குத்தலாகக் கேட்டு வைத்தான்.

''இராசராசச் சக்கரவர்த்தி செய்கிற இந்தக் காரியம் தலைமுறை தலைமுறைக்கும் தஞ்சையின் பெயரை உச்சரித்துக்கொண்டிருக்கும். எனக்கிருக்கும் கவலையெல்லாம் இந்தக் காரியத்திற்கு என் பங்கை எப்படிச் செலுத்துவது என்பதுதான் ''

என்று பெருமூச்சு விட்டுக்கொண்டே பதில் கூறினுள் அந்தப் பழுத்த பழம்.

''ஆயிரம் - கோடியென்று பொன்னையும் பொருளையும் அள்ளிக்கொட்டி நடத்தப்படுகிற இந்த மகாப் பெரிய திருப்பணியில் ஆடு வளர்க்கும் உன்னுல் என்ன பாட்டி உதவி செய்ய முடியும் ''

என்று ஏளனமாகக் கேட்டான் இன்னெரு சிற்பி.

கிழவி அழகிக்கு அந்தக் கேள்வி கோபத்தைத் தூண்டிவிட்டது.

அவள் அதனைச் சமாளித்துக்கொண்டு, அந்தச் சிற்பியை நிமிர்ந்து பார்த்தாள். அப்பப்பா! அந்த முதிர்ந்த விழிகளில்கூட எவ்வளவு கூர்மை! அவன் குனிந்துகொண்டே வேறு பக்கம் நடையைக் கட்டினான்.

அவள் உள்ளத்திலே பல நாட்களாக அந்தப் போராட்டம் நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த அந்த நற்பணிக்குத் தன்னாலான பங்கினையும் செலுத்த வேண்டும் என்பது அவளது தணியாத ஆசை. இந்த வயதில் ஆடு மேய்ப்பதைத் தவிர அவளால் வேறு கடினமான வேலை என்ன செய்ய முடியும்? சுற்றுச்சுவர் எழுப்புகிறவர்களுக்குக் கல்தூக்கித் தர முடியுமா? சேறு குழைக்கத் தண்ணீர் கொண்டுவந்து குடம் குடமாகக் கொட்டக்கூடிய அளவுக்கு அவள் உடலில் வலு இருக்கிறதா? ஆனாலும், சோழப் பேரரசின் செங்கதிரோன் எனப்படும் இராசராசனின் வீரத்தையும் வெற்றிகளையும் விவேகச் செயல்களையும் முகில்மாடத்தைத் தொட்டு நின்று வழங்கப்போகிற இராசராசேச்சுரத்தின் எழிலுக்கும் ஏற்றத்திற்கும் தன்னாலான சிறு உதவியையாவது செய்தே தீரவேண்டும் என்று அவள் முடிவு கட்டிக்கொண்டாள். உதவி எத்தகையது என்பதைத்தான் அவளால் திடீரென்று தீர்மானிக்க முடியவில்லை. இரண்டொரு நாட்கள் ஆழ்ந்த யோசனைக்குப் பிறகு, அவள் கோயிற்பணி புரியும் சிற்பிகளை அழைத்துத் தன் முடிவை வெளியிட்டாள்.

அதாவது, தினந்தோறும் மாலைப்பொழுதில் இருபது சிற்பிகள் தமது வேலைமுடிந்ததும், அவள் அளிக்கும் உணவை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

நாள்தோறும் இருபது பேர் என்ற வரிசையில் பட்டியல் மாறி மாறி வரும். அனைவருக்கும் ஏககாலத்தில் உணவளிக்க அவளால் இயலாது. கிழவியின் உணர்ச்சியையும் உள்ளன்பையும் சோழ நாட்டின் மீது வைத்துள்ள பற்றையும் பாசத்தையும் புரிந்து கொண்ட சிற்பிகளும் அவளது வேண்டுகோளுக்கு இணங்கினர். அந்திப் பொழுதில் அந்தக் கிழவியின் வீட்டுச் சாப்பாட்டு முறை யென்றால் சிற்பிகளுக்கு ஒரே கொண்டாட்டந்தான். அவள் வளர்த்த ஆடுகள் ஒவ்வொன்றாகக் குறைந்துகொண்டு வருவதைச் சிற்பிகள் கவனித்தார்கள். அவைகளை விற்றுத்தான் அவளால் சிற்பிகளுக்கு விருந்து வைக்க முடிந்தது.

ஆடுகள் குறைந்துவிட்டதைப்பற்றி அவளுக்குத் துளி அளவு கூடக் கவலையேற்பட்டதாகத் தெரியவில்லை. சிற்பிகள் ஒரு நாள் கோயில் வேலைகளைக் கவனிக்க வந்திருந்த இராசேந்திரனிடம், கிழவி அழகியின் தூய்மையான அன்புபற்றியும் கடமையுணர்ச்சி பற்றியும் கூறிப் புகழ்ந்தார்கள். மறுநாள் இரவு கிழவியின் வீட்டு வாயிற்புறத்தில் ஆயிரம் ஆடுகள் கொண்டுவந்து நிறுத்தப்பட்டன.

காலையில் அவைகளைக் கண்ட கிழவி, ''ஆண்டவனின் லீலா விநோதம்தான் இது !'' என்று ஆனந்தக்கூத்தாடினாள். இராசேந்திரனின் நல்லுதவியென்பது அவளுக்குத் தெரியாமலே போய் விட்டது. அவளை இராசேந்திரன் அழைத்துவரச் செய்து, தன் தந்தையிடம் அறிமுகப்படுத்திவைத்தான். அப்போதும் அவள் ஆடுகளை ஆண்டவன் அளித்தான் என்றுதான் சொன்னாள். கிழவியின் ஆர்வத்தைக் கண்ட இராசராசன் அவளைப் பார்த்துக் கனிவுடன் ''அம்மையே ! உமது விருப்பம் ஏதாவது இருப்பின் தெரிவிக்கலாம். உடனே நிறைவேற்றுவதற்கு வழி செய்வேன்'' என்றுரைத்தான்.

''சக்கரவர்த்தியார் அவர்களே ! தங்கள் திருவாயால் என்னை அம்மையே என்று அழைத்ததைவிட வேறென்ன பாக்கியம் இருக்கப்போகிறது எனக்கு ! தங்களின் அழியாத பெயரை ஆண்டாண்டுக் காலத்திற்கும் சொல்லிக்கொண்டிருக்கப்போகும் இராசராசேச்சுரத்தில் பணிபுரியும் சிற்பிகளுக்கு உணவளித்த பெருமையொன்றே எனக்குப் போதும்''

என்று கூறி, மன்னனின் திருவடிகளில் விழுந்து வணங்கப் போன கிழவி அழகியை மன்னன் தடுத்து நிறுத்தி,

''அம்மையே ! உமது வெள்ளை உள்ளத்தை நான் புரிந்து கொண்டேன். மன்னன் செய்யும் காரியங்கள் மன்னனுக்கே மட்டும் சிறப்பூட்டுவன அல்ல ! அப்படி இருக்கவும் கூடாது என்பது என் விருப்பம். சோழப் பேரரசின் மேன்மைக்கு யார் பாடுபடுகிறவர்களோ, அவர்கள் யாராயிருப்பினும் என் நன்றிக்குரியவர்கள். என் ஒருவனுடைய தனி ஆற்றலால் விளைந்தது அல்ல இன்றையச் சோழ மண்டலம் ! இதோ நிற்கும் என் வீர மைந்தனின் வாள் வலிமையால் மட்டும் ஏற்பட்டதல்ல இந்தப் பேரரசு ! எத்தனையோ சோழ குல மாணிக்கங்களின் வீரத் தோள்களும், தங்களைப் போன்ற மாதாக்களின் நல்வாழ்த்துக்களும் உருவாக்கிய அரசு இது ! நான் தங்கள் நிழலில் தானம்மா நின்று கொண்டிருக்கிறேன் ! அதனால் தாராளமாகக் கேளுங்கள், தங்களுக்கு வேண்டியதை '' எனப் பரிவுடன் கூறினான். அரசன். கிழவி, ஏதோ சொல்ல வாயெடுத்துச் சற்றுத் தயங்கிப் பின்னர் தொடர்ந்தாள்.

''மன்னர் மன்னா ! ஏழையின் விண்ணப்பம் ஒன்று உண்டு, கோயிலில் அமைக்கப்படும் விமானத்தின் மேல் தளத்திற்குப் பெரிய அளவில் ஒரே கல்லாக ஒன்று வேண்டுமென்று சிற்பிகள் சொல்லக் கேட்டேன். அப்படிப்பட்ட கல் ஒன்று என் வசம் இருக்கிறது. அதனை ஏற்றுக்கொள்ள வேண்டுகிறேன்.''

இதைச் சொல்லி முடிப்பதற்குள் கிழவியின் கண்களில் நீர் துளித்துவிட்டது.

''ஒரே கல்லா ?''

அரசன் வியப்புடன் சிற்பிகளைப் பார்த்துக் கேட்டான்.

''ஆம் அரசர் பெருமானே ! விமானத்தின் மீது ஒரே கல்லில் தளம் அமைப்பது சிறப்புடையதாக இருக்கும் என்று கண்டராதித்தர் கூடக் கருத்துத் தெரிவித்தார். இளவரசர் அவர்களும் அதனை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்'' என்றனர் பணிவுடன் சிற்பிகள் !

''விமானம் விண்ணைத் தொடவல்லதாய் அமைகிறது. அதன் உச்சியிலே கொண்டுபோய் மிகப் பெரும் கல்லை ஏற்றுவதென்றால் சாத்தியமாகுமா ?'' என்ற கேள்வியை இராசராசன் எழுப்பினான்.

உடனே கிழவி, மிக மரியாதையுடன் தலை வணங்கி,

''அரசர்க்கரசே ! என் வீட்டிலிருந்து சாரம் ஒன்று கட்டினால் கோபுரத்தின் உச்சிக்கு அந்தக் கல்லை ஏற்றுவது மிகச் சுலபமாக இருக்கும். என் வீட்டுக்கும் கோபுரத்திற்கும் இடையே நான்கு கல் தொலைவு இருக்கும். அங்கிருந்து சாரம் கட்டினால் கல்லைச் சாலையில் உருட்டிக்கொண்டு போவது போலச் சாரத்தில் உருட்டிச் சென்று விமானத்தில் ஏற்றிச் சென்றுவிடலாம்.'' என்று வழி சொல்லிக் கொடுத்தாள்.

அவளது வியத்தகு அறிவினைக் கண்டு சோழப் பெருவேந்தன் திகைத்துப்போனான். அவள் அளிக்கும் கல்லை விமானத் தளமாகப் பயன்படுத்த அவன் முடிவு செய்துவிட்டான். அந்த முடிவினைப் புன்னகை ததும்ப அறிவித்தவாறு, ''ம் !..நான் என்னதான் பெரிய கோயிலைக் கட்டினாலும் கடைசியில் ஆண்டவன் 'யாம் கிழவி அளித்த நிழலில் உவந்திருக்கின்றோம் !' எனக் கூறிவிடப் போகிறார்'' என்று பெருமூச்சு விட்டுக்கொண்டான். அது ஆயாச மூச்சல்ல ! ஆனந்த மூச்சு !

அழகி கூறிய ஆலோசனையின்படியே நான்கு கல் தொலைவிலுள்ள அவள் வீட்டிலிருந்து சாரம் கட்ட ஆரம்பித்து, அதில் அந்தப் பெரும் கல்லைத் தூக்கிவைத்து விமானத்திற்குக் கொண்டு சென்றார்கள் சிற்பிகள். சாரம் கட்டப்பட்ட அந்த இடத்திற்குச் 'சாரப்பள்ளம்' என்ற பெயரும் உடனே வழங்கத் தொடங்கிற்று. கிழவியின் நுண்ணறிவையும், தொண்டு உள்ளத்தையும் கௌரவிக்கும் முறையில் தஞ்சையில் அழகிக்குளம் ஒன்றை அமைக்கச் செய்தும் நன்றியைத் தெரிவித்துக்கொண்டான் அரசன்.

ஆலயம் முடிவடையும் கட்டத்தை அடைந்துவிட்டது. இராசராசனும் இராசேந்திரனும் குந்தவையாரும் கூறிய ஆலோசனைகளின்படி எல்லாப் பணிகளையும் கண்டராதித்தன் நிறைவேற்றிவிட்டான். ஆனால் அரசன் விரும்பியவாறு நூற்றெட்டுத் தாண்

டவ நிலைகளைத்தான் இன்னும் செதுக்கிடத் தொடங்கவில்லை. இது இராசராசன் இதயத்தில் பெருங் குறையாகவே இருந்தது. அந்த வேலை பூர்த்தியடையாமல் அவனுக்கு நிம்மதி கிடையாது.

சோழன் மாளிகையில் அதுபற்றி விரிவான பேச்சு அரங்கம் ஒன்றே ஏற்பாடாயிற்று. கண்டராதித்தனை அரசன் அவசரமாக அழைத்துவரச் சொன்னான். இராசராசன், இராசேந்திரன், அவன் மனைவி பஞ்சவன்மாதேவி, குந்தவையார் முதலிய சோழக் குடும்பத்தினர் அந்த உரையாடலில் கலந்து கொண்டனர். இராசராசன் மன நிலையை விளக்கிக், குந்தவையார் மிக உருக்கமாகக் கண்டராதித்தனிடம் கூறினார்.

''அரசரின் விருப்பம் என்ன காரணம் பற்றிக் கவனிக்கப்படவில்லை ?''

—இது குந்தவையாரின் கேள்வி.

''கவனிக்கப்படவில்லை என்று கற்பனை செய்வது தவறு. நாடெங்கும் தேடிப் பார்த்த பின் சென்ற கிழமைதான் ஒரு கைதேர்ந்த சிற்பியைக் கண்டு பிடித்தேன்.''

—இது கண்டராதித்தன் பதில்.

''கைதேர்ந்த சிற்பியைக் கண்டு பிடித்து ஒரு கிழமையான பிறகும் சிற்ப வேலை தொடங்கப் பெருமைக்கு என்ன விசித்திரக் காரணம் வைத்திருக்கிறாய் ?''

அரசனின் ஆத்திரம் கலந்த வினாவுக்குக் கண்டராதித்தன் நிதானமாகவே விளக்கமுரைத்தான்.

''கல்லில் உயிரூட்டித் துள்ள வைக்கும் சிற்பி அவன் ! அவன் இளம் வயதினன்தான் ! ஆனால், அவனது கலையில் பண்பின் முதிர்ச்சி இருக்கிறது. கருங்கல் பாறையிலே மென்மையான மலர்களைக்கூடச் செதுக்கிவிடுகிறான். உளியைக் கையில் எடுத்து, ஒரு பாறையின் முதுகில் தட்டிக் கொடுத்துவிட்டு வேலையைத் தொடங்கினான் என்றால், சிறிதுநேரத்திற்கெல்லாம் அந்தப் பாறையில் பாவையொருத்தி சிரிக்கிறாள் ; பழம் கொத்தும் கிளியைக் காட்டுகிறான்; பண் இசைக்கும் ஆயனை - மாயனை அனைவரையும் நம் எதிரே நிறுத்துகிறான்.''

''யார் அவன் ? பெயர் ?''

''மாமல்லபுரத்திலிருந்து வந்திருக்கிறான். அவன் பெயர் இனியன்.''

''அவ்வளவு ஆற்றல் படைத்தவன் தாண்டவச் சிற்பங்களை அமைக்கத் தாமதம் செய்வது ஏன் என்பதுதான் என் கேள்வி !''

''அதைத்தான் சொல்ல வருகிறேன் ; தாண்டவச் சிற்பங்களை அவன் ஆக்குவதற்கு உதவியாக, நடனக் கலையை முறையோடு பயின்று, நல்ல தேர்ச்சிபெற்ற பெண்ணொருத்தி அவன் எதிரே நின்று, தேவைப்படும்போதெல்லாம் தாண்டவ நிலைக்கு ஏற்றவாறு

பாவம் பிடித்துக் காட்ட வேண்டுமாம். அப்போதுதான் தத்ரூப மான தாண்டவ நிலைச் சிற்பங்களைச் செதுக்க முடியும் என்று முடிவாகக் கூறிவிட்டான்.''

''ஓ ! இயற்கையைக் கலையில் வடிக்கும் உண்மைக் கலைஞன் போலும் ! அவன் கோரியபடி ஏற்பாடு செய்திருக்கலாமே ! ஏன் தாமதம் ?''

''தேர்ச்சி பெற்ற நடனப் பெண்கள் யாரும் கிடைக்கவில்லை.''

''என்ன ஆச்சரியம் ? நானூறு தேவமாதர்களுக்குத் தலைக்கு ஒரு வேலி நிலம் நிபந்தம் கொடுத்து நியமித்திருக்கிறேன். அவர்களில் ஆடத் தெரிந்தவர்கள் யாருமே இல்லையா ?''

''நூறு நடன மாதர்கள் அந்தச் சிற்பிக்கு முன் ஆடிக்காட்டி விட்டார்கள்.''

''நூறு பெண்களில் ஒருத்திகூடத் தேறவில்லையா ?''

''நக்கன் ராசராச கேசரி, நக்கன் சோழகுல சுந்தரி போன்ற ஆடற்கலையரசிகள் எல்லாரும் தங்கள் திறமை முழுதும் காட்டி ஆடிவிட்டார்கள். அவர்களில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு குற்றம் கூறிப் புறக்கணித்துவிடுகிறான். அவன் தீர்ப்பும் சரியான தாகத் தோன்றுகிறது.''

''அப்படியா ?''

''ஆம் ! அகோர தாண்டவத்தை அழகாக ஆடிக் காட்டியவள் ஆனந்தத் தாண்டவத்தில் தவறு செய்கிறாள். அற்புதத் தாண்டவத்தை ஆடிக்காட்டிப் பாராட்டைப் பெற்றவள் திரிபுர தாண்டவத்தினைத் தீ மிதிப்பதுபோல ஆடித் தீர்த்துவிடுகிறாள். இப்படியே அவர்கள் ஒதுக்கப்பட்டுவிட்டார்கள்.''

''சோழப் பேரரசில் கலையின் உயிர் போய்விட்டது. அது தானே கண்டராதித்தா இதற்குப் பொருள்? கலை வளர்த்த பூமி சோழபூமி என்ற பெருமை நிலைக்கும் என்று எண்ணிக்கிடந்தேன். எண்ணத்தில் மண் விழுந்துவிட்டது. கலிங்கம் வென்றேன், ஈழம் வென்றேன் என்றெல்லாம் வருங்காலம் என்னைப் புகழும்போது, என்னுடைய ஆட்சியில் என்னுடைய ஓர் ஆசையை நிறைவேற்ற முடியாமல் தோற்றுப்போனேன் என்ற அவச் சொல்லும் சேர்ந்து தானே ஒலிக்கப்போகிறது? கலை வளர்ச்சிக்காகச் செலவிடப்படும் பொருட் குவியல் என்ன ஆயிற்று ? முறையாகக் கலையைப் பயிற்றுவிக்கும் கலைக்கூடங்களின் தலையில் பேரிடியா விழுந்துவிட்டது ? அவமானம் ! அவமானம் !! மேலைக் கடற்கரையோரத்து மன்னர்களை என் கப்பற்படை கலக்கியிருக்கிறது. சோழ நாட்டில் கலை கருகியது என்ற செய்தி இப்போது என்னைக் கலக்குகிறது. மகேந்திர மலையில் நான் நிலை நாட்டிய வெற்றித்தூண்! 'அவையெல்லாம் வீண்' என்று இப்போது எனக்குச் சொல்லாமல் சொல்கிறீர்கள், தஞ்சையில் கலை அழிந்தது என்ற தணல் நிகர் செய்தியின் மூலம் !'

எதிர்காலத்தில் நமது பேரரசின் பரப்பளவா மிச்சம் இருக்கப்போகிறது ? இருந்தால்தான் என்ன ? அதைப் பார்த்து எனது வீரத்தை மதிப்பிடலாம். 'கலையுள்ளம் இல்லாத காட்டுமிராண்டியின் போக்கிற்கு வீரமென்று பெயர் ? வெறிக் கூத்தல்லவா ?' - என்று எதிர்காலம் கேள்வி கேட்குமே ! அதற்குப் பதில் சொல்வது யார்? தஞ்சைக் கோயிலில் இருக்கும் என் சிலையா ? வேண்டாம் ! வேண்டாம் ! அந்தச்சிலையை அவமானப்படுத்த வேண்டாம் ! இப்போதே அதனை உடைத்தெறிந்துவிட உத்தரவிடுகிறேன் !''

இராசராசனின் ஆவேசமும் சோகமும் கலந்த உரைகளைக் கேட்டு அனைவரும் அதிர்ச்சி அடைந்துவிட்டனர். குந்தவையார் கண்களில் நீர் தளும்பிற்று. கண்டராதித்தன் மௌனமாக வேறு பக்கம் திரும்பிக்கொண்டான். பஞ்சவன்மாதேவி தன் கணவன் இராசேந்திரனின் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

இராசேந்திரன் தந்தையின் ஆத்திரத்தைத் தணிக்கும் எண்ணத்துடன் தழுதழுத்த குரலில் அவனது கால்களில் தனது முகத்தை புதைத்தவாறு, ''தந்தையே ! அப்படியெல்லாம் சொல்லாதீர்கள். தாங்கள் ஆணையிட்டு நாங்கள் எதை நிறைவேற்றாமல் விட்டிருக்கிறோம்? நூற்றெட்டு நிலையுள்ள நடனச் சிற்பங்களை அந்தச் சிற்பி இனியனை விட்டே செதுக்கச்செய்கிற பொறுப்பை நானே ஏற்றுக்கொள்கிறேன். தாங்கள் கவலையை விடுக !'' என்று உறுதியாகக் கூறினான். இராசராசனும் மகனின் உறுதி கேட்டுச் சிறிது அமைதி பெற்றான்.

அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு ஒருநாள் மாலை, கோயில் வேலையில் ஈடுபட்டிருந்தவர்கள் எல்லாரும் தங்களுடைய அன்றைய வேலையை முடித்துவிட்டு, உணவருந்தவும் ஓய்வு பெறவும் புறப்பட்டுக்கொண்டிருந்தார்கள். மாமல்லபுரத்திலிருந்து வந்துள்ள சிற்பி இனியன் மட்டும் ஒரே கல்லில் செதுக்கப்பட்டிருந்த பெரிய நந்திச் சிலையின் அருகே அமர்ந்து ஆகாயத்தை நோக்கிச் சிந்தனையை ஓடவிட்டுக் கொண்டிருந்தான். வந்து நாட்கள் பலவாகியும் தனக்குரிய சிற்ப வேலையைத் தொடங்குவதற்கு வாய்ப்பு ஏற்படவில்லையே என்ற கவலை அவன் முகத்தில் படர்ந்திருந்தது என்று யாரும் யூகித்துவிடலாம். தன்னை அழைத்திருக்கிற அரசனோ சோழப் பேரரசின் இணையற்ற சக்கரவர்த்தி இராசராசன். அவன் பெயர் கேட்டுப் பகைவர் நாடுகள் ஊமையாய் ஆமையாய் அடங்கிக் கிடக்கின்றன. அப்பேர்ப்பட்ட மாவீரன் அழைத்திருக்கிறான். அவன் இட்டிருக்கிற பணியோ மிகப் பெருமை வாய்ந்தது. அதனைச் செய்து முடித்துவிட்டால் இராசராசனின் பெயரோடு சிற்பி இனியனின் பெயரும் சேர்ந்து ஒலிக்கும், கலை உலகத்தில் ! ஆனால் அந்தப் பேறு விரைவில் கிட்டாமல் தள்ளிப் போட்டுக்கொண்டே

போகிறது. அதை நினைத்து ஏங்கிக்கொண்டிருந்த இனியனின் காதில் ''தம்பீ !'' என்று யாரோ அழைக்கும் ஒலி கேட்டது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். கிழவி அழகி அவனருகே வந்தாள். அவளைப் பார்த்த இனியனின் கண்கள் அவளுக்குப் பின்னால் நின்ற அழகிய பெண்மீது பாய்ந்தன.

தங்கமேனி.

தாமரை முகம்.

நீலக் குறுநயனம்.

கோலச் செவ்வாய்.

வில்போல் புருவம்.

விம்மிய மார்பகம்.

ஆலிலை வயிறு.

நூலிழை இடை.

இத்தனை அழகையும் இனியன் ஒரே பார்வையில் மொண்டு விட்டான். அது சிற்பியின் கலைக் கண்ணோட்டமே தவிரச் சித்தம் பேதலித்தவனின் காம வெறியாட்டமல்ல !

''பாட்டீ ! என்ன வேண்டும் ? யார் இந்தப் பெண் ?''

''தம்பீ ! இவள் என் மகள் ! உறையூரிலிருந்து நேற்றுத்தான் வந்தாள். உன்னைப் பார்க்கத்தான் அழைத்து வந்தேன்.''

இனியன் அவளை மீண்டும் கவனமாகப் பார்த்தான். அழகே உருவாக நிற்கும் அவளுக்கு அந்தச் சாதாரண ஆடைகள் மேலும் பொலிவை அள்ளிப் பொழிந்ததை அவனால் ரசிக்க முடிந்தது.

''உன் பெயர் என்னம்மா ?''

சிற்பியின் கம்பீரமும் கனிவும் குழைந்த கேள்விக்கு அவள் அளித்த பதிலில் இனிமை தவழ்ந்தது.

''என் பெயர் சாமுண்டி !''

கிழவி, இனியனிடம் தான் வந்த காரியத்தை எடுத்துரைக்க விரும்பினாள்.

''தம்பீ ! இந்த இராசராசேச்சுரத்தை வெற்றிகரமாகக் கட்டி முடிக்க என்னால் இயன்ற உதவிகளையெல்லாம் செய்வதென்று முடிவுகட்டிக் கொண்டிருக்கிறேன். அது ஒன்றுதான் என் வாழ்க்கையின் கடைசி இலட்சியமாகும். அரசர் பெருமான் விரும்பியவாறு நடனச் சிற்பங்கள் இன்னும் செதுக்கப்படாததால் ஆலயத் திருப்பணி முடிவடைந்தும் அவருக்கு மன நிறைவு ஏற்படவில்லையென்று கேள்விப்பட்டேன். நீ செதுக்க வேண்டிய சிற்பங்களுக்குத் தேவையான நாட்டியமாடப் பெண்கள் கிடைக்காமல் வேலை தயங்கிக் கிடக்கிறதாமே ? அதற்காகத்தான் என்மகள் சாமுண்டியை அழைத்து வந்திருக்கிறேன். இவள் நாட்டியக் கலையை முறையாகப் பயின்றவள். உன் சிற்பங்களுக்கு ஏற்றவாறு ஆடிக் காட்டுவாள். இவள் உதவியை நீ பெற்று அரசர்

பெருமானின் ஆசையை விரைவில் நிறைவேற்ற முடியுமா — என்று சொல்லு !''

இனியன் ஆச்சரியத்துடன் கிழவியையும் சாமுண்டியையும் மாறி மாறிப் பார்த்தான்.

''நான் முதலிலேயே நினைத்தேன்—உடலமைப்பு நடனத்திற்கென்றே அமைந்ததுபோல் இருக்கிறதென்று ! எங்கே சாமுண்டி, நான் கேட்கும் சில தாண்டவ நிலைகளின் பாவத்தைப் பிடித்துக் காட்டு, பார்ப்போம் !''

—என்று குளிர் மொழிகளை வாரியிறைத்தான் இனியன். ஆடற்கலையில் மிக்க வல்லவர்களாகவும், அதற்கெனக் கலைக்கூடங்களில் பயின்றவர்களாகவும் உள்ள நூற்றுக்கணக்கான பெண்கள் தோல்வியுற்றுத் திரும்பிய ஒரு போட்டிக்குச் சாதாரண ஒரு பெண் - ஆடுங்கலை தெரியாத குடும்பத்தில் பிறந்தவள் - ஆடு வளர்க்கும் கலை மட்டுமே பயின்ற அழகியின் திருமகள் - தைரியமாக வந்து நிற்பது கண்டு அவனுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. தன் சிற்பப் பணி முடிவடைந்துவிடும் என்ற ஆறுதலும் தோன்றிற்று. அந்த மகிழ்ச்சியையும் ஆறுதலையும் வெற்றிகொள்ளும் வகையில் ஐயப்பாடும் எழுந்தது. 'அவள் திறமையுள்ளவள்தானா ? தனக்கு உதவியாக இருப்பாளா ? தன் கலைத் தொண்டினை வெற்றிபெறச் செய்வாளா ?' இந்த வினாக்குறிகளின் களமாயிற்று இனியனின் நெஞ்சம்.

சாமுண்டி பூமியைத் தொட்டு வணங்கி, ஆசான் வணக்கம் தெரிவித்துவிட்டு, அந்தச் சிற்பியின் முன்னால் வந்து நின்றுகொண்டு அவன் வாயசைவுக்குக் காத்திருந்தாள். சிற்பி இனியன் அவளைச் சோதித்துத் தேர்ந்தெடுக்கும் முறை எப்படியென்பதைக் கிழவியும் ஆவலுடன் எதிர்பார்த்தவாறு அங்குள்ள ஒரு படியின்மீது உட்கார்ந்துகொண்டாள். மகள் சாமுண்டி வெற்றி பெறுவாள் என்ற நம்பிக்கை அந்தக் கிழவியின் முகத்தில் ஜொலித்துக்கொண்டிருந்தது.

ஊர்த்துவ தாண்டவத்தின் நிலைகளைக் குறிப்பிட்டு பாவங்களைக் காட்டுமாறு முதலில் கூறினான். சாமுண்டி அவன் விரும்பிய பாவங்களை யெல்லாம் துரிதமாகவும் மிகத் துல்லியமாகவும் பிடித்துக்காட்டினாள். அடுத்தது ஆச்சரிய தாண்டவம் ! அகலத் திறந்துகொண்ட அவள் விழிகளிலிருந்துபொழிந்த வண்ணமிருந்த வியப்பே வியப்பு !

வெள்ளிமலர் ஒன்றின் நடுவில் கரு வண்டு சுழல்வதே போல் அவள் கரு விழிகள் சுழன்ற காட்சி கண்டு இனியன் அயர்ந்து போனான்.

அகோர தாண்டவத்தின்போது அந்த மலர் முகம் எப்படித்தான் நெருப்பாக மாறியதோ தெரியவில்லை !

ஆனந்தத் தாண்டவம் என்ருன். நெருப்பு முகம் நிலவாகச் சிரித்தது! நெளியும் கைவிரல்கள் பார்ப்பவர் நெஞ்சில் புத்துணர்ச்சி பாய்ச்சின! நெஞ்சத்து விம்மல், கலையழகின் உச்சத்தை உணர்த்தியது!

அனவரதத் தாண்டவத்தின் பாவமும், அற்புதத் தாண்டவத்தின் நேர்த்தியும், இனியன் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. தன் முயற்சி வெற்றிபெறும் என்ற பூரண நம்பிக்கையில் பூரிப்படைந்தான். திரிபுரம், புஜங்கம் ஆகிய தாண்டவங்களுக்குரிய பாவங்களை அவள் ஆடிக்காட்டி இனியனின் மனமார்ந்த பாராட்டுரைகளைப் பெற்ருள்.

சங்கார தாண்டவத்தின் பாவ உணர்ச்சியை அவள் காட்டும் போது, கொடுவாள் கொண்டு நிற்கும் மாவீரனும் நடுங்கிவிடக் கூடும்.

பிரளய தாண்டவத்திற்குரிய சில நிலைகளைக் காட்டும்போது கலைவயப்பட்ட இளைஞனும் சிற்பி இனியனின் கண்கள் நீர்த்திவலை நிறைந்து மின்னிக்கொண்டிருந்தன. அவள் கைகள் அசைந்தன; அதில் கடல் கொந்தளித்தது! உடல் குலுங்கி ஆடிற்று; அதில் மலைகள் நடுங்கின! இடை துவண்டது; அதில் நதிகள் திசை மாறிப் போயின! விழிகளை உருட்டினுள்; அதில் எரிமலை பொங்கியெழுந்தது! கோபச் சிரிப்பு; அங்கே மின்னல்கள் கோடி கோடி ! பூமி அதிர்ந்தது போல் - பூகம்பம் வந்தது போல்- புயலும் தீயும் தோழமை கொண்டு தாவியது போல் - அவள் ஆடிக் காட்டிய பிரளய நடனத்து நிலைகள் கண்டு இனியன் மெய்ம்மறந்து போனுன். அழகிக் கிழவி ஓடிப்போய்த் தன் மகளைக் கட்டித் தழுவிக்கொண்டு அவள் நெற்றியில் முத்தமிட்டாள்.

தன்னை மறந்து நின்றுகொண்டிருந்த இனியன், மெல்ல நினைவு வரப் பெற்றவனுய்ப்பேசுவதற்கு நாவை நனைத்துத் தயார்படுத்திக் கொண்டு, ''சாமுண்டி ! கலையுலகின் தலைமைப் பீடத்தை அலங்கரிக்க வேண்டிய தெய்வம் நீ ! அழகிப் பாட்டி செய்த பாக்கியம் கலைமகள் அவள் வயிற்றில் உதித்திருக்கிருள் என்றுதான் கூற வேண்டும். பாட்டி மிகுந்த புண்ணியம் செய்தவள். அதனுல் தான் அவள் அளித்த தளக்கல் இவ்வளவு புகழ் வாய்ந்த கோபுரத்து விமானத்தின் உச்சியில் ஏறிக்கொண்டது. அவள் வயிற்றில் பிறந்த உன் கலைச் செல்வமும் கோயிலின் மேல்தளத்தின் உட்பாகத்து அடிவரிசையில் பாதுகாக்கப்படப் போகிறது. சாமுண்டீ! ஆண்டவனே வந்து இந்தத் தாண்டவங்களை ஆடிக் காட்டியிருந்தாலும் உன்னை ஜெயித்திருக்க முடியாது என்பதே என் திடமான அபிப்பிராயம்.'' என்றவாறு வர்ணிக்கத் தொடங்கிய இனியனை இடைமறித்துக் கிழவி, ''அப்படியானுல் தம்பீ, நாளை முதல் சாமுண்டியை இங்கு வரச் சொல்லட்டுமா ?'' என்று கேட்டாள்.

''கேட்க வேண்டுமா என்னே ? அவளால் கலே பிழைக்கப் போகிறது ! அவளால் கலே வாழப் போகிறது ! அவளால் கலே வளமுறப் போகிறது !'' என்று பேரானந்தத்தில் பிதற்றத் தொடங்கினுன் அந்த வாலிபச் சிற்பி.

மறுநாள் சாமுண்டி, இனியன் குறித்த நேரத்திற்கு வந்து சேர்ந்தாள். சிற்ப வேலே தொடங்கிற்று ! தேவையான அபிநய பாவங்களே அவன் விரும்பியபோதெல்லாம் பிடித்துக் காட்டி, முதல் சிற்பத்தை எழிலோடு வடிப்பதற்குத் துணே நின்ருள். ஒரு நாளேக்கு ஒரு சிற்பச் சிலே வடித்துவிடலாம் என்ற நம்பிக்கையைச் சாமுண்டிக்குத் தெரிவித்து அவளே முதல் நாள் வழியனுப்பி வைத்தான்.

அடுத்த நாளும் அவர்கள் எண்ணியவாறு சிலே முடிந்தது.

அடுத்தடுத்து ஐம்பது நாட்கள் உருண்டு விட்டன. ஒவ்வொரு நாளும் சாமுண்டி வரும்போது ''வா !'' என்று வரவேற்பான். இடையிடையே தேவையான பாவ நிலேகளேக் குறிப்பிடுவான். மாலேயில் ''போய் வா !'' என விடையளிப்பான். இதைத்தவிர மற்ற நேரமெல்லாம் மௌனம் தான் ! கலேயுணர்வுதான் அவனே ஆட்சி செலுத்தி வந்தது.

அந்தச் சிறப்புப்பணி நடைபெறுகிற இடத்திற்கு வேறு யாரும் அனுமதிக்கப்படுவதில்லே. இனியன் - சாமுண்டி இருவரைத் தவிர வேறு யாரும் அங்கிருப்பதுமில்லே. எப்போதாவது அழகிக் கிழவி வருவாள். மகளின் திறமையை வியந்து முத்தமளித்து மகிழ்வாள். இனியனின் கலேத்திறன் பற்றிப் புகழ்வாள். ''ஆண்டவனேக் காட்டிலும் சாமுண்டி அழகாக ஆடுகிருள் ; உண்மைதான் ! ஆனுல், அவளேக் காட்டிலும் அழகான சிற்பங்களே யல்லவா நீ படைத்திருக்கிருய் ?'' என்று அவனேத் தழுவி உச்சி மோந்து வாழ்த்துக் கூறுவாள். பின்னர் போய்விடுவாள்.

ஐம்பது நாட்களுக்குப் பிறகு ஒரு நாள், இனியன் கல்லே மிக நுட்பமாகச் செதுக்கிக்கொண்டிருக்கும்போது, அவன் விரல் நுனியில் உளி பட்டுவிட்டது. நல்ல வாலிபப் பருவமல்லவா? இரத்தம் குபுகுபு எனக் கொட்டியது. சாமுண்டி. பரபரப்படைந்தாள். உடனே தன் சேலேத் தலேப்பைக் கிழித்து அவன் விரலில் சுற்றிவிட்டாள். அதன் காரணமாக இரண்டுநாள் வேலே தடைப்பட்டது. சாமுண்டி, கோயில் பக்கம் வரவில்லே. அவளேக் காணுதது இனியனுக்கு ஏதோ ஓர் ஏக்கத்தை ஏற்படுத்தியது. அந்த ஏக்கம் எதனுல் எழுந்தது? இத்தனே நாளாகத் தோன்ருத ஏதோ ஓர் உணர்வு இன்று எங்கிருந்து முளேத்தது ? அப்படியானுல் அவளேப் பற்றித் தவருன எண்ணம் தன் நெஞ்சின் அடித்தளத்தில் படிந்து கிடந்ததா ? அந்த எண்ணம் அவளேக் காணவில்லேயென்றதும் சிறகு

முளைத்துக் கிளம்பிவிட்டதா ? இவ்வளவு நாளும் அவளைக் கலைக் கண் கொண்டுதானே ரசித்து வந்தான் அந்தச் சிற்பி! இப்போது மட்டும் அவன் கண்களுக்குப் புதுப் பசியை உண்டாக்கியது யார்? வேறு யாருமில்லை ! அவளேதான் ! சாமுண்டியேதான் ! அவள் பார்வையில் தனி அர்த்தம் இருந்ததா ? இல்லை ; இதுவரையில் அவன் கவனிக்கவில்லை ! அவள் அழகைக் கண்டு அவன் வியந்திருக் கிறானே தவிர, மயங்கியது கிடையாது. இப்போது ஏனோ எழிலை நினைத்து உருகிக்கொண்டிருக்கிறான். அவள் ஆடிக் காட்டிய ஒவ் வொரு நிலையிலும் கலாதேவியின் சௌந்தர்யத்தைத்தான் அவன் பார்த்துப் பரவசமுற்றிருந்தான். இப்போது அந்த அபிநயங் களின்போது அசைந்த அவள் அழகுத் திருமேனியின் ஒவ்வொரு அங்கமும் அவன் நெஞ்சத்தில் கிளர்ச்சியை ஏற்படுத்தி அவனைச் சித்திரவதை செய்துகொண்டிருக்கிறது.

ஒருவேளை அவளைக் காணாத காரணத்தால் ஏற்பட்ட தடுமாற் றமாக இருக்கக் கூடுமா ? அங்ஙனமானாலும் அந்தத் தடுமாற்றத் தின் அடிப்படையில் ஏதோ ஓர் உணர்ச்சி தலைதூக்குவானேன் ? அந்த உணர்ச்சிக்கு நிச்சயமாகக் கலைமெருகு கொடுத்து மூடி மறைக்க அவன் தயாராக இல்லை.

இப்படி இரண்டொரு நாட்கள் அவனைப் பித்தனாக அலைய விட்ட சாமுண்டி, அவன் சிற்ப மண்டபத்தை நாடி வழக்கம்போல் வந்து சேர்ந்தாள். அவனும் வழக்கம் போலத்தான் ''வா'' என்று அழைத்தான். ஆனால் அவன் குரல் நடுங்கிற்று. அதை அவள் உணர்ந்தாள். அவன் கவனிக்கவில்லை. ''விரலில் பட்ட காயம் எப்படியிருக்கிறது?'' என்று கேட்டாள். ''மருந்து எதுவும் போடவில்லை; உன் சேலைத் தலைப்பு பட்ட பிறகும் காயம் ஆறாமல் இருக்குமா ?'' என்று படபடவென்று கேட்டு முடித்துவிட்டான். அந்தப் பதைப்பு அடங்கச் சிறிது நேரமாயிற்று, அவனுக்கு! அவள் அவனை மிரட்டுகிற பாவனையில் பார்த்தாள். இனியன் சமாளித்துக் கொண்டு, ''ம் ! இதுதான் இன்றையச் சிற்பத்துக்குத் தேவையான பாவம் !''

—என்று கூறியவாறு உளியைக் கையில் எடுத்துக் கல்லில் செதுக்கத் தொடங்கினான். அன்று வழக்கத்திற்கு மாறாக மாலைப் பொழுதுக்குப் பிறகும் சிற்ப வேலை முடியவில்லை. கொஞ்சந் தான் இருக்கிறது; முடித்துவிடலாம் என்று கூறித் தீப்பந்தங்களின் உதவியோடு அவன் வேலையில் கவனம் செலுத்தினான். அன்று வேலை வேகமாக ஓடாத காரணம் அவனுக்குத்தான் தெரியும்! சாமுண்டிக்குப் புரியவில்லை. சிற்பச் சிலையின் மீது ஒரு கண்ணும், சாமுண்டியின் மீது ஒரு கண்ணுமல்லவா அன்று இனியனுக்கு இருந்தது ! தீப்பந்த வெளிச்சத்தில் சாமுண்டியின் தங்கமேனி மேலும் தகத்தகாயமாய்த் தோன்றுவதை அவன் அன்றையதினம்

சுவைத்துக்கொண்டே ஒருவாறு அன்றையப்பணியை முடித்தான். ''சிலை மிக அழகாயிருக்கிறது!'' என்று சாமுண்டி பாராட்டிவிட்டுத் தான் போனாள். ஆனால் அவனுக்கு என்னவோ அவ்வளவு திருப்தியில்லை.

இப்படியே சில நாட்கள் நகர்ந்தன. சாமுண்டியின் உள்ளத்திலும் இனியனைப் பற்றிய குழப்பம் எழுந்திருக்கிறது என்பதற்கு அறிகுறிகள் அவள் முகத்தில் தோன்றியவண்ணம் இருந்தன.

அன்று எண்பத்தொன்றாவது சிற்பத்திற்கான அபிநயத்தைச் சாமுண்டியிடம் அவன் சொல்லிக்கொண்டிருந்தான்.

''இறைவன் நான்கு புஜங்களுடன் மானுடனும் மழுவாடவும் யக்ஞோபவீதத்துடன் ஆடும் தாண்டவத்திற்கான பாவ நிலைகளை ஆடிக்காட்டு !'' - என அவன் கூறியதும் அவளும் அந்த பாவத்தை அவனுக்குப் பகுதி பகுதியாகப் பிரித்து அங்கங்களின் அசைவுகளைக் கூடத் தனித் தனியாக விளக்கிக் காட்டும் தோரணையில் ஆடிக் காட்டினாள்.

''இந்தக் கையை கொஞ்சம் உயரத் தூக்கி நின்றால் இன்னும் அழகாயிருக்குமல்லவா ?'' — என்று கேட்டபடி அவன் சாமுண்டியின் கரத்தைத் தொட்டு அதை உயரத் தூக்கப் போனான்.

அவளோ சட்டென்று அவனை விட்டு நகர்ந்துகொண்டாள். அவள் கன்னம் சிவந்திடும்—நாணம் பொங்கிடும்—தலை குனிந்திருப்பாள் - என்றெல்லாம் எதிர்பார்த்த இனியன் ஏமாந்து விட்டான்.

அவளோ, அப்படியொரு நிகழ்ச்சி நடக்காதது போலத் தொடர்ந்து தன்னுடைய கலைப் பணியைத் தொடங்கினாள். இனியன் முகத்தில் அசடு வழிந்தது.

அவள் தன்னை விரும்பவில்லையா ? ''இனியன், எழிலன் என்று ஊர் முழுதும் பேசுவார்களே ! என்னுடைய உடற்கட்டையும், உறுதியான தோள்களையும் பார்ப்பவர்கள் நீ ராஜ வம்சத்தில் பிறந்திருக்க வேண்டியவன் என்று பாராட்டுவார்களே ! அப்படிப்பட்ட என்னை இந்தச் சாமுண்டிக்கு மட்டும் பிடிக்கவில்லையா ?''

என்றவாறு கேள்விகள் அவன் இதயத்தைச் சல்லடைக் கண்களாக்கிக்கொண்டிருந்தன. அத்துடன் அன்றைய வேலையும் தங்கு தடையின்றி நடைபெற்றது. பயத்திலும் பரபரப்பிலும் அவன் வேலையில் தீவிரங்காட்டி மாலைப் பொழுதுக்குள்ளாகவே அந்தச் சிலையை முடித்துவிட்டு, ''நாளைக்கு எண்பத்திரண்டாவது சிலை'' என்று அவளிடம் கூறினான்.

அன்றையச் சிலையின் அழகைச் சாமுண்டி வெகுவாக விமர்சித்தாள். ''நான் ஆடிக் காட்டிய பாவங்களைத் தங்கள் உளியின் வலிமையால் படைத்து விட்டீர்கள் !'' என்று அவள் புன்னகை

பொங்கக் கூறியபோது, அதன் இதயம் குளிர்தாமரைக் குளம் போல ஆயிற்று. அவள் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டாள். அவள் பின்னழகைப் பார்த்துக்கொண்டிருந்த அவன் கண்கள் இமைக்க மறந்தன. அவன் செதுக்கியிருந்த எண்பத்தொரு சிற்பங்களையும் பார்த்தான். சிற்பங்கள் திடீரென மறைந்து விட்டன. எண்பத்தொரு சாமுண்டிகள் அங்கே ஆடிக்கொண் டிருந்தார்கள். அந்த ஆட்டத்திலே அவன் லயித்துக் கிடந்தான். கலை நினைவோடு உருவாக்கப்பட்ட அந்தச் சிலைகள் சாமுண்டியின் உருவில் அவன் உள்ளத்தில் காதல் தீயை மூட்டிவிட்டுத் தாண்டவ மாடிக் கொண்டிருந்தன. அந்தப் பெரு நெருப்பின் ஜுவாலையை அவனால் தாங்கத்தான் முடியவில்லை. தனக்குத்தானே அறிவுரை கூறிக்கொண்டான். பால்பானையை உருட்ட வந்த பூனையை எத்தனை முறை விரட்டினாலும் அது ஓடி. ஓடிப் பின்னர் பதுங்கிப் பதுங்கிப் பால்பானையைத்தான் வட்டமிடும். அது போலாயிற்று அவன் உள்ளத்தில் கொப்புளித்துக் கிளம்பிய காதல் மகா சக்தி !

மறுநாள் எண்பத்திரண்டாவது சிற்பத்தைச் செதுக்க அவனும் தயாராக இருந்தான். அவளும் வந்து சேர்ந்தாள். அவன் அவளைப் பார்வையாலே வரவேற்றான்.

''வா'' என்று கூற நா எழவில்லை.

''இன்று எண்பத்திரண்டல்லவா ?'' - அவள் !

''ஆமாம் !'' - அவன் !

''இன்னும் இருபத்தேழு இருக்கிறதே !''-அவள் !

''ஏன் உனக்குக் கஷ்டமாயிருக்கிறதா ? கலை கூடவா தெவிட்டி விட்டது ?''

''இல்லை ! இல்லை ! இன்னும் எத்தனை இருக்கிறது என்று எண்ணிப் பார்த்தேன். அவ்வளவுதான் !''

''நான் நினைக்கிறேன், இன்னும் நூறு சிற்பங்கள் பாக்கி யிருக்கக்கூடாதா ? அத்தனை நாளும் சாமுண்டியின் கலையழகை தரிசிக்கும் பாக்கியம் எனக்கு ஏற்படக்கூடாதா என்று !''

''நான் நினைக்கிறேன், அரசர்க்கு அரசர் நூற்றெட்டு சிற்பங்களை ஏன் செதுக்கச் சொன்னார் ? எண்பத்து இரண்டுதான் எனறு கூறியிருக்கக்கூடாதா என்று !''

''கேலி செய்கிறாயா சாமுண்டி ?''

''இல்லை ! இல்லை ..ம், வேலையைப் பார்ப்போம். வீண் பேச்சு எதற்காக ?''

சாமுண்டி நடன நிலைக்கான பாவங்களைக் காட்டத் தயாராகி நின்றாள். இனியனும் உளியை எடுத்துக்கொண்டு கல்லினருகே சென்றான். அவனுக்கு உளி பிடிக்கக்கூடச் சக்தியில்லாதது போல் ஓர் உணர்வு ! மயக்கம் !

''சௌந்தர்ய தாண்டவம் !'' என்றான் தழுதழுத்த குரலில் !

அவன் நா ஒட்டிக்கொண்டது. அவள் ஆடத் தொடங்கினாள்.

அவளே சௌந்தர்யச் சுரங்கம்! அதிலே சௌந்தர்ய தாண்டவம் ஆடச் சொன்னால் எப்படியிருக்கும்? அவன் தலை கிறுகிறுத்தது. இராசராசேச்சுரமே தலை கீழாகச் சுற்றுவது போன்ற ஒரு நினைவு! அவனையும் மீறி அவன் கையிலிருந்த உளி, கலைப்பணியில் ஈடுபட்டிருந்தது. அவள் பூமியில் ஆடவில்லை. அவனது மென்மையான இதயத்தில் ஆடினாள்; அவன் விழி மணிகளில் ஆடினாள்; அவன் நரம்பு, நாளங்களில் ஆடினாள்; இரத்தத்துளிகளில் ஒவ்வொன்றிலும் ஆடினாள். ஆடினாள்; ஆடினாள்; ஆடிக்கொண்டேயிருந்தாள்! அவள் பட்டுப் பாதங்கள் அவன் தலையில் பட்டு ஆடுவதுபோல் நினைத்தான். அவள் மாணிக்கக் கரங்கள் அவன் மார்பகத்தைத் தழுவுவதுபோல் உணர்ந்தான். அவள் விழிகள் அவன் விழிகளை விழுங்குவது போல் கற்பனை செய்தான். அவள் இதழ்கள், அவன் இதழ்களை.... அய்யோ! அதற்குள் கருங்கல் செதில் ஒன்று அவன் கண்ணில் தெறித்துக் குத்திக்கொண்டது; அவன் உளியைக் கீழே எறிந்துவிட்டு "அம்மா!" என்று கதறிவிட்டான்.

அவள் பதறிப்போனாள். அவனைத் தாங்கிப் பிடித்து விழாமல் நிறுத்தினாள். அவளது அழகிய கரங்களால் அவன் முகத்தை நிமிர்த்திக் கண்ணில் விழுந்த கருங்கல் செதிலைக் காந்தள் விரலால் மிக லாவகமாக எடுத்தெறிந்தாள். அவ்வளவுதான்! ஒரு திடீர் மின்னல்! அவன் அவளைப் பலங்கொண்டமட்டும் சேர்த்துப் பிடித்துத் தழுவிக்கொண்டான்! மின்னலைத் தொடர்ந்து பேரிடி! பெரும் புயல்! பிரளயத் தாண்டவத்தின் பிரதிபலிப்பு! சாமுண்டி அவனைப் பிடித்துக் கீழே வேகமாகத் தள்ளிவிட்டாள். அவன் அலறிக்கொண்டு தரையில் மோதி விழுந்தான். விழுந்தவன் சிறிது நேரம் எழவேயில்லை. அவன் கண்கள் சுழன்றன; சிற்ப மண்டபமே சுழன்றது; அவன் செதுக்கிய எண்பத்தொரு சிலைகளும் சுழன்று ஆடின!

மானாடியது! பிறகு அது மிரண்டோடியது! மான் புலியாக மாறிப் பாய்ந்தாடியது! இறைவன் கழுத்தில் அணிந்திருந்ததாகச் செதுக்கப்பட்ட பாம்புகள் ஆயிரமாயிரம் படமெடுத்தாடின! இறைவன் கைநெருப்பு பல திக்கிலும் சூழ்ந்தாடியது! இளையன் சுழலும் கண்களை நிலைநிறுத்தி எழுந்திடப் பார்த்தான். முடியவில்லை! அப்போது "தேவீ!" என்று ஒரு குரல் கேட்டுச் சாமுண்டி திரும்பிப்பார்த்தாள். திடுக்கிட்டுப்போனாள். இராசேந்திரன் அவளை நோக்கிப் பரபரப்புடன் வந்துகொண்டிருந்தான்; அவன் பின்னால் இராசராசச் சோழரும் குந்தவையாரும் வந்தனர். சாமுண்டி இராசேந்திரனிடம் ஓடி, "அத்தான்!" என்று தழுவிக்கொண்டு கண்ணீர் வழிய வழிய விம்மி அழத்

தொடங்கினுள்.

''அத்தான்! போதும் நான் செய்த கலைத்தொண்டு !!''
என்று கதறினுள்.

இராசேந்திரன் அவளை இறுக அணைத்தவாறு ஆறுதல் மொழியில்,

''பஞ்சவன் மாதேவி! கலைத் தொண்டினைப் பழிக்காதே! எவனே ஒரு கலைஞன் செய்த தவற்றுக்காகக் கலையின் மீதே வெறுப்புக் கொள்ளலாமா? பாவம்; இனியன் தெரியாமல் செய்த பிழைதான் இது! அவனை மன்னித்துவிடலாம்!''

இந்த உரையாடல் இனியனைத் தட்டி எழுப்பியது.

அவள் யார்?

பஞ்சவன் மாதேவியா?

அவள் சாமுண்டி இல்லையா?

சாரப்பள்ளம் அழகியின் மகள் இல்லையா?

பஞ்சவன் மாதேவி!

பஞ்சவன் மாதேவி!!

இராசேந்திரன் மனைவி!

இராசராசனின் மருமகள்!!

அய்யோ! என்ன தவறு செய்துவிட்டோம்!!

இனியனுக்கு இப்போது எங்கு நிற்கிறோம் என்றே புரியவில்லை! அவன் செத்துக்கொண்டிருக்கிருன்!!

அவனுக்கே தெரியவில்லை!

அழுதுகொண்டிருக்கும் மருமகளிடம் வந்து இராசராசன் ''பஞ்சவன் மாதேவி! என்னுடைய கலை ஆசையை நிறைவேற்றுவதற்கு உன் கணவன் இராசேந்திரன் இட்ட கட்டளையை எனக்காக ஏற்றுக்கொண்டு நீ செய்த தியாகத்தை நான் என்றும் மறவேன். உங்களுக்குத் துணையாக இருந்து உதவிய கிழவி அழகியை எப்படிப் பாராட்டுவதென்றே தெரியவில்லை, அவள் உன்னைச் சிற்பக் கூடத்திற்கு அனுப்பியது மட்டுமல்ல; கண்ணுங் கருத்துமாக இருந்து உன்னைப் பாதுகாத்தும் வந்திருக்கிருள். நேற்றைய தினம் அவள் கொடுத்த செய்திக்குப் பிறகுதான் சிற்பியின் மீது சந்தேகமுற்ற நாங்கள் இன்று இங்கு வந்தோம். உனக்கு நாங்கள் அளித்த தொல்லைக்காக எங்களை மன்னித்துவிடு!'' என்று கண்ணீர் பொங்கக் கூறியதும், ''சக்கரவர்த்தி! அப்படிச் சொல்லாதீர்கள்!'' என்றவாறு அரசரின் காலில் விழுந்து வணங்கினுள் பஞ்சவன்மாதேவி!

''யார் யாரை மன்னிப்பது?'' என்று அவள் அரசரைப் பார்த்துத் தேம்பும் குரலில் கேட்டாள்.

''நாம் எல்லாரும் சேர்ந்து சிற்பி இனியனை மன்னித்து விடுவோம்.'' என்றவாறு அரசர் அவன் நின்ற பக்கம் திரும்பினுர்.

அனைவரும் இனியன் பக்கம் திரும்பினர். அவனை அங்குக் காண வில்லை.

அவன் ஓடினான்! ஓடினான்! யாரும் அவனைப் பிடித்து மன்னிக்க முடியாத தூரத்துக்கு ஓடியே போய்விட்டான்!

குறிப்பு : ''இராசராசன், இறைவனின் 108 தாண்டவ நிலைகளைப் பெரிய கோயில் மேல்தளத்தின் உட்பாகத்து அடிவரிசையில் சிற்பங்களாகச் செதுக்க ஏற்பாடு செய்தான். வேலையும் தொடங்கி நடைபெற்றது. ஆனால் எக்காரணம் பற்றியோ 81 சிற்பங் களைச்செய்து முடித்து 82-வது ஆரம்பித்து முடிக்காமல் விடப்பட்டிருக்கிறது'' என்ற சரித்திரக் குறிப்பை அடிப்படையாக வைத்து இந்தக் கதை எழுதப்பட்டது.




''குமுதா ! அவளுக்கு அவன்தான் அமுதா ?'' என்று நினைத்த வாறே என்னவோ ஊஞ்சலில் அமர்ந்தார் உலகநாதர். ''ஏன், வேலையெல்லாம் முடிந்ததா ?'' என்று கேட்டபடி கண்ணம்மா பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள் ; ஊஞ்சல் வேகமாக ஆடிற்று. உலகநாதரின் உள்ளத்தின் அசைவை அது வெற்றிகொண்டதாக அவருக்குத் தோன்றவில்லை. கண்ணம்மாவின் கரங்கள் உலக நாதரின் உடலில் நகர்ந்துகொண்டிருந்தன. அவள் அவரது தோள்களை அனிச்சக் கைகளால் அழுத்திப் பிடித்தபோதுகூட ஆனந்த ஒளி இதயப் படுதாவில் விழவில்லை. உலகநாதரின் எண்ணங்கள் ஊர்க் கடைசியிலுள்ள குப்பத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தன ; கண்ணம்மா அவருக்குப் பொன்னம்மாவாக விளங்குவாள். அவளது மிருதுவான ஸ்பரிசம், அவரது சிந்தனையைச் சிதற அடிக்கும் சிரிப்பு, அவரைச் சொர்க்க லோகத்திற்கு இட்டுச் செல்லும் சொகுசான லீலைகள் - இவைகளில் சொக்கிக் கிடப்பார்.

ஆனால், அவர் அன்று கண்ட காட்சி மட்டும் அவருக்கு வேப்பங் காயாக இருந்தது. ''ஏன் மௌனமா........ இருக்கீங்க ?'' என்று கேட்டுக்கொண்டே உலகநாதரின் முகத்தைத் திருப்பினாள் கண்ணம்மா. கண்ணம்மாவின் விரல் பட்ட மாத்திரத்தில் காந்தத்தோடு தொடரும் இரும்பு போலக் கழுத்தைத் திருப்பும் உலகநாதர் அன்று முரட்டுத்தனமாக, முகத்தை அசைக்காம

லேயே இருந்துவிட்டார். கடைசி வரையில் பார்த்துவிடுவதென்ற முடிவில் கண்ணம்மா ஊஞ்சலைவிட்டுக் கீழே இறங்கினாள். உலகநாதரின் உந்தலினால் ஆடிக்கொண்டிருந்த ஊஞ்சல் கண்ணம்மாவைக் கீழே தள்ளிற்று. கண்ணம்மா கீழே விழுந்தாள். அடி அவ்வளவாக இல்லை. ஆனாலும் எவரெஸ்ட் சிகரத்திலிருந்து வழுக்கி விழுந்தவள்போல வேதனையைக் கொட்டினாள்.

உலகநாதருக்குக் கருணை பிறந்தது. ''கண்ணம்மா! கண்ணம்மா!'' என்று கூறிக்கொண்டே அவளைத் தூக்கினார். மீண்டும் ஊஞ்சல் ஆட ஆரம்பித்தது.

உலகநாதரும் கண்ணம்மாவும் இன்பபுரிப் பிரயாணத்தை ஆரம்பித்தனர்.

உலகநாதர்! ஆமாம்; 'மண்டிக்கடை மன்னர்' என்று கூடப் பட்டஞ் சூட்டுவார்கள், மகாநாடு கூட்டினால். அவ்வளவு பெருத்த வியாபாரி. கண்ணம்மா! அவள் குடும்பமும் அவருக்குச் சளைத்ததல்ல. செல்வமும் செல்வமும் கைகோத்துக் கொண்டன. பணமும் பணமும் உராய்ந்துகொண்டன. நான்கு வருடங்கள். உலகநாதர் - கண்ணம்மா திருமணமாகிக் கழிந்த ஆண்டுகள் அவை.

உலகநாதர் சற்றுத் தடித்த தோலர். ரோசமில்லாக்காரணத்தாலல்ல; உடற்கூறுதான் அப்படி! கண்ணம்மா ரோஜா மலர். அவளை இவருக்குக் கட்டினார்கள். அதைப் பற்றி உலகம் பேசாமலில்லை. பணக்காரர் வீட்டுப் படிக்கட்டுமேல் பாமரர் பேச்சு ஏறுமா? கண்ணம்மாளுக்கு வாழ்க்கை கசப்பாகத்தானிருந்தது.

ஆனால், அவளாகத் தயாரித்துக்கொண்ட திட்டம், முறிந்த வாழ்வை உயர்த்திற்று; கூனலை நிமிர்த்திற்று. உலகநாதர் வீட்டு வண்டிக்கார வீரன் கட்டழகன். கண்ணம்மாவின் வலையில் வீரன் மாட்டினான். இது அவள் குற்றமா? அல்லது உலகநாதரின் வெம்பிப்போன அழகின் குற்றமா? இந்த விசாரணைக்கு வீரன் போகவில்லை. உதட்டில் தடவப்பட்ட தேனை நக்கினான்; சுவைத்தான்; தேனடையைத் தேடினான். ருசி கண்ட பூனை உறியைத் தாவாமலிருக்குமா? கண்ணம்மா, 'கற்போடு நடக்க வேண்டுமே' என்று குழம்பிக்கொண்டிருந்தபோது, ''சாகும்போது என்ன சங்கரா வேண்டியிருக்கு!'' என்றான். உலகநாதருக்கு உபசரிப்புக் குறையவில்லை. அன்பை அவருக்கு அர்ப்பணிப்பதாகக் கண்ணம்மா கூறினாள். அந்த நாடகத்தில் உலகநாதரின் ராஜ பார்ட் கம்பீரங்கொண்டது. ஆனால் ஸ்திரிபார்ட் போட்டிருப்பது ஆண் என்றுகூட ஐயமுறாத நிலை அவருக்கு! கண்ணம்மாவின் கன்னங்களைச் சுவைக்க நேரமிருந்தது அவருக்கு! கருத்தைச் சோதிக்க நினைப்பில்லை.

சீமான் வீட்டுச் செல்வி சின்னப் புத்திக்காரியாக இருப்பாள் என்று அவர் கருதத்தானில்லை. வீரனுக்கல்லவா தெரியும் அவளின் விரகதாபம் !

உலகநாதருக்கு மஞ்சம் உண்டு; கொஞ்சல் உண்டு ; ஆனால், அவ்வளவும் வீரனுக்குப் போக எஞ்சியதுதான்!

உலகநாதரிடம் நடனமுண்டு ; நெளிவு உண்டு; ஆனால், அந்தக் கேளிக்கைக்கு வாடிக்கைக்காரன் வண்டிக்கார வீரன்தான் !

உலகநாதரிடம் ஊடல் உண்டு ; கூடல் உண்டு ; பாடல் உண்டு ; ஆனால் அப்போதும் கண்ணம்மாவுக்கு வீரனைக் காண வில்லையே என்ற வாடல் உண்டு !

உலகநாதரிடம் உல்லாசம் பரிமாறுவதுண்டு ; சல்லாபம் உண்டு ; எல்லாமுண்டு ; ஆனால் வீரனிடம் நடிப்பதற்கு இவை ஒத்திகைகள்!

வண்டிக்கார வீரன் பலே ஆள் ! கட்டுமஸ்தான உடல்; உழைத்து உழைத்துப் பக்குவம் பெற்ற உடற்கட்டு ; முகத்திலே எப்பொழுதும் ஓர் அலாதியான தேஜஸ் ! 'ஷை' என்று அவன் மாடுகளை அதட்டுவதே ஒரு சங்கீதமாயிருக்கும். அலட்சியமாகப் பார்வையைச் சிந்தும்போது அவன் ஒரு பாட்டாளி என்பதையே மறந்துவிடுவான். அவனது சிரிப்பிலே ஒரு தனி அழகு தாண்டவ மாடும். அரும்பிய சிறு மீசைகள் ; அவசரத்தையே காட்டிக் கொண்டிருக்கும் அசைவுகள் !

கண்ணம்மாவின் கருத்தைக் கிளற இவை போதாவா ? கண்ணம்மா கற்போடு நடக்க வேண்டுமென்றுதான் முதலில் கருதினாள். ஆனால், உலகநாதரின் விகார ரூபம் அவள் பிடிவாதத்தை உடைத்தெறிந்தது. வீரனின் 'கணீ'ரென்ற அதட்டல் காளை மாடுகளை அதிரச் செய்தது. அதே சமயத்தில் அந்த ஒலி கண்ணம்மாவுக்குக் கீதமாக இருந்தது. வண்டிக்காரரின் முறைப்பு, வெறித்த வண்டி மாடுகளுக்கு உதறலைத் தந்தது. அதே சமயத்தில் கண்ணம்மாவுக்கு அது கம்பீரப் பார்வையாக இருந்தது. அவனது சவுக்கடிகள் மாடுகளுக்கு மனவேதனையைக் கொடுத்தன. அந்தச் சப்தத்தில் அவனது ஆற்றல் ஒளிந்து கிடப்பதாகக் கண்ணம்மா கருதினாள். கண்ணம்மாவின் அணைப்பு வீரனுக்கு ஆனந்தமாகத்தானிருந்தது. ஆனால், அவன் ஆண் வர்க்கமல்லவா ? சுவைக்காததைச் சுவைத்தான் ; கிடைக்காதது கிடைத்தது ; முடியாதது முடிந்தது ; எஜமானியின் ஆசைக்குரியவன்தான் ! வீரனுக்கும் கண்ணம்மாவுக்கும் இருந்த தொடர்பு வரவர தாட்சண்யமாக மாறிற்று. உறியில் தாவும்போது பயப்படாத பூனை உறியை அடைந்ததும் பயப்பட்டது போல - சுவரைத் துளைத்தபோது அஞ்சாத திருடன் வீட்டில் நுழைந்தவுடன் அஞ்சுவது போல-வீரன் கண்ணம்மாவின் கட்டிலில் அகப்பட்ட பிறகு

நடுங்கினன் ஊருக்காக ! உலகநாதர் வீட்டு விஷயம் ஊரில் பரவிற்று. ஊர் தூற்றுமோ ? எஜமான் அறிந்தால் என்ன ஆகுமோ ? என்ற கேள்விகள் வீரனைத் திக்கு முக்காட வைத்தன.

வண்டியுடன் மாடுகளுண்டு, வண்டிக்காரன் வீரனுண்டு என்ற நிலை ஏற்பட்டது பின்னல் ! கண்ணம்மாவைக் கண்டாலே முகத்தைத் திருப்பிக்கொண்டு போய்விடுவான். முகாந்தரம் தெரியாமல் கண்ணம்மா விழித்தாள். கடிதம் எழுதலாம் என்று நினைத்தாள் ! நினைப்பு இருந்தது, நேரமிருந்தது, தாள் இருந்தது, பேனு இருந்தது. ஆனல், வீரனுக்குக் கல்வி வாடை இல்லையே! கண்ணம்மா கலங்கிய உள்ளத்துடனே காலத்தைக் கடத்தினள். வீரனின் ஊடல் தீரும்வரை உலகநாதரிடம் உல்லாச நாடகத்தின் ஒத்திகைகளை நடத்தி வந்தாள்.

அப்போதுதான் ஒரு நாள் உலகநாதர் - கண்ணம்மா ஊஞ்சல் ஆட்டம் நடைபெற்றது. கண்ணம்மா கிளறிக் கிளறிக் கேட்ட பிறகு உலகநாதர் வாயைத் திறந்தார்.

உலகநாதர் பண்ணையில் வேலை பார்க்கும் உத்தண்டி என்ற தலையாரி ஒரு கிழவன். அவனது மகள் குமுதா. குமுதம் என்ற பெயரின் சுருக்கம் குமுதா. உத்தண்டியின் தங்கை மகன்தான் வீரன். குமுதாவின் அத்தான். குமுதாவும் வீரனும் குலவிக் கொண்டிருந்ததை உலகநாதர் கண்ட அன்றுதான் ஊஞ்சல் உரை யாடல் நிகழ்ந்தது.

உத்தண்டியின் மகளிடம் உலகநாதருக்கு மோகம். கண்ணம்மா தரும் காதல் ரசத்தைவிடக் குமுதாவின் கொவ்வை இதழ்களில் கசியும் இன்பம் அதிக விலை என்று புள்ளி போட்டார். இவ்வள வுக்கும் அந்த மகானுபாவன், மாதிரி பார்க்கக்கூட இல்லை. கண்ணம்மா, போனல் போகட்டும், கட்டிய புருஷனல்லவா என்று ஊருக்குப் பயந்தோ, அல்லது சொத்துக்கு ஆசைப்பட்டோ உலக நாதரிடம் ஆசை காட்டி வாழ்ந்ததை, அவர் அன்பின் சிகரம் என்று நினைத்துவிட்டார். தமது அழகில் ஈடுபட்ட மயக்கம் என முடிவுகட்டிவிட்டார். கண்ணம்மா தம்மையே கடவுளாக நினைத்து விட்டதாகக் கனவு கண்டார்.

கடவுளுக்கு நைவேத்தியம் என்று கூறிப் பொங்கல் பள்ளயம் பாவாடை போட்டு, அதைக் கருத்துக்கேற்ற கனகசுந்தரிகளுக்கு ஊட்டுகின்ற பூசாரியைப் போலவே, கண்ணம்மாவும் தன்னைக் கணவனுக்கு நைவேத்தியம் செய்து இன்பத்தை வீரனுக்கு வழங்கி வந்தாள். இதை அந்த இளித்தவாயர் அறியவில்லை. பாவம் ! கடவுளாவது கற்சிலை ; கண்ணில்லாதவர் ! இந்தக் கணவனுக்கோ கருத்துமில்லை ; கவனிப்புமில்லை.

இந்தக் கடவுளுக்குக் காட்டப்பட்ட பிரசாதத்திற்கு வீரன் நாக்கைத் தீட்டிக்கொண்டிருந்தான். அது ஒரு காலம் ! ஆனல்

அதே வீரன் தன் அத்தை மகள் குமுதாவிடம் எஜமானியம்மாள் தனக்குக் கற்பித்த பாடங்களை நடத்த நாள் எண்ணி வந்தான்.

குமுதாவிடம் ஆவலைக் கொட்டியிருந்த உலகநாதர் உள்ளம் வெதும்பினர், உடல் இளைத்தார்.

குமுதா குடியானவன் வீட்டுப் பெண்தான். அலங்காரமில்லாவிட்டாலும் அழகி; 'மேக்கப்' இல்லாவிட்டாலும் மேனியில் ஒரு லலித கலை; சுருக்கமாகக் கூற வேண்டுமானல், குமுதா ஒரு குளிர் தென்றல் !

அவள் வீரனுக்குக் கிடைக்க அவனுக்கு உரிமை இருந்தது. அத்தான் என்ற முறையின் காரணமாக மட்டுமல்ல ; அவன்தான் அவளுக்கும் சத்தான பொருள். வீரன் எஜமானியம்மாளின் இஷ்டத்திற்குரியவன் என்ற செய்தி குமுதாவுக்குத் தெரியாது. கொழுந்துப் பெண்தானே அவள் ! வீரனை நம்பினுள், வீரனும் வாழ்க்கையின் துணையாக அவளை ஏற்றுக்கொள்ளத் துணிந்தான்.

இதற்கிடையில் உலகநாதர் நின்றுர், குமுதாவை ருசி பார்க்கக் குள்ள நரியாக ! 'குமுதா எப்படியும் கிட்ட வேண்டும்' – இந்த எண்ணத்தைக் கண்ணம்மாவிடம் கக்கிவிட்டார். ஆம் ! ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தபோதுதான் உள்ளத்தைத் திறந்தார். ஒளித்து வைத்திருந்ததை எடுத்து நீட்டினுர். ''கண்ணம்மா என் கண்ணல்ல....நான் உன்னை அலட்சியப்படுத்துவதாக நினைக்காதே ! எப்படியாவது ஒரு நாள்....குமுதா என் படுக்கையை அலங்கரிக்க வேண்டும். இதை நீதான் செய்ய வேண்டும்.... தயவு செய். உன் தாளைப் பிடிக்கிறேன். இரங்கமாட்டாயா?'' என்று வேண்டினுர்.

அதற்குப் பிறகு நடந்தது என்ன ? அந்த வரலாற்றை ஒவ்வொருவரும் கூறுகிறுர்கள், கேளுங்கள் !

**உத்தண்டி:**

பல் முளைத்த நாள் முதல் நான் பண்ணைக்காரர் வீட்டில்தான் அடிமை வேலை பார்க்கிறேன். பரம்பரை பரம்பரையாக என் பாட்டன் பூட்டன் எல்லோருமே அடிமைகள்தான். என் தகப்பனுக்குஎன்னைச் சுதந்திர மனிதனுக ஆக்க எங்கிருந்து புத்தி தோன்றும்?உலகநாத முதலியார் என்னைவிட எத்தனையோ வயது இளையவர்.நான் அந்தப் பண்ணையில் மாடு மேய்க்கும்போது அவர் பிறக்கக்கூட இல்லை. இப்போது உலகநாதர் என்றுலே அடி வயிற்றில் 'பகீர்' என்கிறது. இத்தனைக்கும் மண்டிக்கடை ஆசாமி தான்.ஆனுல், லட்சுமி அங்கு விளையாடுகிறுள். அங்கேயே வாசம் செய்கிறுள். அவர் பார்த்து ஒழிக்க வேண்டுமென்றுல் ஒழித்துக் கட்டிவிடலாம். என் வீடு, மனை, தோட்டம் எல்லாம் அவரிடம்.

அடமானம். அந்தத் தைரியத்தில்தான் அவர் என் நெஞ்சத்தைக் குத்திக் கிளறிவிட்டார்.

அவருக்கு நான் பட்டிருக்கும் கடன் 500 ரூபாய். உலோபி மனுஷன் நம்மை நம்பி எப்படிக் கடன் கொடுத்தார் என்று நினைத்தேன். அவருடைய தாராள புத்தியின் சரியான காரணம் இப்போதுதான் தெரிந்தது. குமுதா என் பெண், ஆசை மகள். அவள் அம்மா சாகும்போது குமுதாவை என்னிடம் ஒப்படைத்தாள். குமுதாவுக்கு வாழ்க்கையில் துன்பம் தோன்றவே கூடாது என்று எண்ணினேன். ஆனல், கடவுள் அப்படி நினைக்கவில்லை. உலகநாதரையல்லவா எமனுக அனுப்பியிருந்தான் பாழும் கடவுள்?

அன்று உலகநாதர் என்னைக் கூப்பிட்டு அனுப்பினர். ஏதோ சாகுபடி விஷயம் என்று நானும் போனேன். ''வா, உத்தண்டி!'' என்று அவர் அழைக்கும்போதே அவரது முகத்தில் ஆவல் ததும்பிக் கொண்டிருந்தது. நாங்கள் பேசிக்கொண்டிருந்த இடத்தில் யாருமே இல்லை, ''ஏண்டா உத்தண்டி!'' என்று அதிகாரத் தோரணையில் கூப்பிடும் அவர் அன்று பரிவோடு என்னை அழைத்தார். அகம்பாவமாகவே என்னிடம் நடந்துகொள்ளும் அவர் சில நாட்களாக அன்பு வார்த்தைகளையே உபயோகித்தார்.

''ஏன் எஜமான் கூப்பிட்டீங்களாம்?'' என்று கேட்டுக் குனிந்து நின்றேன். ''கடனை வளர்த்துக்கொண்டே போகிருயே, வட்டி வளருதே, தெரியலியா?'' என்று கேட்டார், அஸ்திவாரத்தைப் பலமாகப் போட்டுக்கொண்டார். நான் அவர் கருத்தை முதலில் அறியவில்லை; பேசாமல் நின்றேன். ''உன் மகளுக்குக் கல்யாணம் காட்சி நடத்தவில்லையா?'' என்று அடுத்த கேள்வியைப் போட்டார். அதையும் நான் விகற்பமாகக் கருதவில்லை. பண்ணையாள் குடும்பத்திலே அய்யாவுக்கு எவ்வளவு அக்கறை என்று சந்தோஷப்பட்டுக்கொண்டேன். ஆனல், அதை அவர் நீடிக்கவிடவில்லை. ''நம் வீட்டு அண்ணிக்கு வேலைக்காரி ஒருத்தி வேண்டுமாம். கல்யாணம் ஆகிற வரையிலே உன் மகளை இங்கே விட்டு வையேன்'' என்றுர். நான் அப்போதுதான் தடுமாறினேன். ''அவள் குழந்தைங்கோ, தனியா இங்கே இருக்க பயப்படுவாளே'' என்று பல்லைக் காட்டினேன். ''உன் மகளைக் காட்டிலா கொண்டு வந்து விடப்போகிருய்? அட பைத்தியக்கார மனுஷா!'' என்று ஏளனம் செய்தார் உலகநாதர். எனக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை. ''எப்போதும் இங்கேதான் இருக்கணுமா?'' என்று ஒரு கேள்வியைப் போட்டு வைத்தேன். ''அட ஒரு இரண்டு மூணு மாதத்துக்கு இருக்கட்டுமே, என்ன உன் பெண் தேய்ந்தா போய்விடுகிருள்! கண்ணம்மாவோடு இருந்து பழகினுல் குடும்ப விஷயமும் புரியும். வேறு ஒரு புருஷன் வீட்டுக்குப் போனுலும் நல்ல குடித்தனக்காரியென்று பெயரெடுப்பாள்'' என்று

பிரசங்கம் செய்ய ஆரம்பித்தார். என்னால் மறுக்கவே முடிய வில்லே ; மறுக்க தைரியமும் இல்லே. மறுத்திருந்தால் மறுநாளே அவருடைய கடனே அடைத்தாக வேண்டும். நான் 500 ரூபாய்க்கு அப்பொழுது எங்கே போவேன்? இந்தப் பாழுந் தெய்வங்கள் என்னே அப்படியா வைத்திருந்தன ? அவைகளுக்குத்தான் என்னைப் பற்றிக் கவலேயே கிடையாதே !

''உன் மகள் குமுதத்துக்கு மாதம் 20 ரூபாய் சம்பளம் கொடுக்கிறேன். கவலேப்படாதே. அவளுக்கு இங்கு ஒரு கஷ்ட மும் இருக்காது. கண்ணம்மாவோடு குஷாலாக இருக்கலாம். வேலேயும் அதிகமில்லே'' என்று மறுபடியும் உலகநாதர் உபந்நி யாசத்தை ஆரம்பித்தார். கிராமத்திலே பணத்தைக் கண்டால் பகவானேக் கண்டது போலத்தானே! அதுவும் என் போன்ற தலேயாரிகளுக்குக் கேட்கவா வேண்டும் ! கோபாலகிருஷ்ணபிள்ளே மகள் பள்ளிக்கூடத்திலே 10 கிளாஸ் படிச்சுப்பிட்டு வாத்தியா ரம்மா வேலே பார்த்து மாதம் 20 ரூபாய் சம்பாதிக்கிருள். ஒன்று மில்லாமல் என் குமுதாவுக்கு 20 ரூபாய் சம்பளம் என்றதும் எனக்குச் சபலம் தட்டிற்று ; சிறிது ஆசையும் ஏற்பட்டது. அவ ளுக்கு மாதா மாதம் வரும் இருபது ரூபாயை அப்படியே மீத்துப் புருஷன் வீட்டுக்குப் போகும்போது சீதனமாகக் கொடுத்தனுப்பலா மென்று திட்டங்கள் போட்டுவிட்டேன். உலகநாதரின் உத்தரவு வுக்குக் கீழ்ப்படிந்தேன்.

இந்த அபிப்பிராயத்தை என் குமுதாவிடம் கூறினேன். குமுதா குழந்தை மனம் படைத்தவள் அல்லவா ? என்னைப் பிரிந்து வேறு ஒரு வீட்டில் வேலே செய்யத் தயங்கினுள். ''இந்த ஊர் தானே அம்மா ! ஏன் பயப்படுகிருய் ? நான் உன்னே அடிக்கடி எஜமான் வீட்டிலே வந்து பார்க்கிறேன், பயப்படாதே'' என்று சப்பைக் கட்டுகள் கட்டினேன். அவளும் உலகநாதர் வீட்டுக்கு வேலேக் காரியாகப் போகச் சம்மதித்தாள். அதன்படி அங்குச் சென்று வேலேயிலும் அமர்ந்தாள். பிறகுதான் நான் செய்த தவற்றை உணர்ந்தேன். குமுதாவைக் குழியில் போட்டுப் புதைத்த குருட்டுப் புத்திக்காரனுனேன். இன்னும் சொல்லட்டுமா ?குமுதா ஒருநாள் உலகநாதர் வீட்டுக் கொல்லேப்புறத்தில் உட்கார்ந்திருந் தாள். நான் திடீரென்று அங்குப் பிரவேசித்தேன். குமுதா கண்களேத் துடைத்துக்கொண்டு அவசரமாக எழுந்து, ''அப்பா!'' என்று கூவிக்கொண்டு என்னிடம் ஓடி வந்தாள். ''ஏன் குமுதா, அழுகிருய் ?'' என்றேன். என் மனம் பட்ட பாட்டை ஈசன்தான் அறிவான். குமுதா தேம்பினுள். அழுது அழுது அவள் முகம் வீங்கியிருந்தது. கண்கள் செக்கச்செவேலெனத் தோன்றின. என் கால்கள் நடுங்கின. கைகள் உதறலெடுத்தன. குமுதா பேசத் தொடங்கினுள். ஆனுல், வாய் குளறிற்று. சில வார்த்தைகள்

சொன்னுள். அவைகள் என் காதில் ஈட்டிகளைப் பாய்ச்சின. அதற்குள் எஜமானி கண்ணம்மா, ''குமுதா, குமுதா !'' என்று அழைத்தாள் ; குமுதா ஓடிவிட்டாள். நான் வீடு திரும்பினேன். அன்றிரவு முழுவதும் எனக்குத் தூக்கம் இல்லை. ''குமுதா ! குமுதா !'' என்று புலம்பினேன்.

என் தங்கை மகன் வீரனுக்காக என் அருமைக் குமுதாவை வைத்திருந்தேன். வீரனையும் குமுதாவையும் மணக்கோலத்தோடு பார்க்க எண்ணியிருந்தேன். ஆனல் அதற்குமுன் அவர்கள் ஜோடியாகிவிட்டார்கள். கல்யாணத்தை முடித்துவிடலாமென்று இருந்தேன். இந்த கபோதியிடம் காசு ஏது ? காசில்லாக் கஷ்டத்தால் தானே நான் உலகநாதர் உத்தரவுக்கு இணங்கி என் குமுதாவை வேலைக்காரியாக அனுப்பினேன் !

இந்தக் கண்ணம்மா இவ்வளவு கைகாரி என்று எனக்குத் தெரியாதே! என் வயிற்றை எரியவிட்டுவிட்டாயே! அடி விபச்சாரி !

**கண்ணம்மா :**

ஆம்! நான் விபச்சாரிதான். அது என் குற்றமா? என் மனத்துக் கேற்றவனை மணம் முடித்திருந்தால் என் நிலை இப்படி ஆகி இருக்குமா ? நான் சிறுமியாயிருக்கும்போது, எவ்வளவோ நல்லவளாகத்தான் இருந்தேன். ஊரில் கண்ணம்மா என்றுலே தனிப் பிரியந்தான் காட்டினர்கள். எனக்குக் கடவுளிடத்தில் அபார பக்தி இருந்தது. கிழமை தவறினுலும் தவறும், என்னுடைய விரதங்கள் தவரு. அம்பிகைக்குப் படையல் செய்துவிட்டுத்தான் சாப்பிடுவேன். எதிர்காலத்தில் ஒரு பெரிய 'பக்திமானி'யாக வேண்டுமென்ற பேராசையால் என் நெஞ்சம் நிரப்பப்பட்டிருந்தது. சதா சர்வ காலமும் தெய்வத்தின் திருநாமங்களையே உச்சரித்துக்கொண்டிருப்பேன். இப்பொழுதுதான் என்ன ? எப்பொழுதும் ஆண்டவனைத் துதித்தவண்ணமேதான் இருக்கிறேன். குற்றம் செய்தவர்கள்தானே மன்னிப்புக் கேட்டுக்கொள்ள வேண்டும் ! நான் செய்த விஷமகரமான விபரீதச் செயல்களுக்குக் கடவுளிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளத்தானே வேண்டும் ! ஆனல் ஒன்று ; அதை யாரும் கவனியாது விட்டுவிடாதீர்கள். பகவானிடம் மன்னிப்புப் பெற்றுவிடலாம் என்ற தைரியத்தில் நான் இன்னும் என்னுடலில் ஊறிப்போன செய்கைகளை விட்டுவிடாமல் தான் இருக்கிறேன்; அதை ஏன் கேட்கிறீர்கள் ! விபச்சாரி வேதாந்தம் பேசுகிருள் என்று கூறுவீர்கள், விவேகமொழி கூறுகிருள் என்று ஏளனம் செய்வீர்கள். என்னைப்பற்றி நீங்கள் நன்ருகத் தெரிந்துகொள்ள வேண்டுமா ? இதோ பதில் ! கண்ணம்மா ஒரு விபச்சாரி ! கண்ணம்மா ஒரு பக்த சிரோன்மணி! இன்னும்வேண்டுமானுலும் இதோ விளக்கம், கேளுங்கள் :

என் தகப்பனுர் நல்ல செல்வந்தர். என் தாயார் என்னை வெகு அருமையாக வளர்த்தாள் ; நானும் நன்ருகத்தான் வளர்ந்தேன். எப்படியோ எனக்குத் தெரியாது ; ஒருநாள் உலகநாதரின் திருஷ்டியிலே பட்டுவிட்டேன். ஆண்கள் இருக்கும் பக்கத்தில் போகக்கூடாது என்று என் அன்னை அடிக்கடி கூறித்தான் வந்தாள். ஆனுல் கால வித்தியாசம், அவரது கழுகுப் பார்வைக்கு இரையானேன்! கால்



களின் இடுக்கிப் பிடியில் எலிகளைத் தூக்கிச் செல்லும் கழுகைப் போலவே, உலகநாதர் என்னை அடைந்துவிட்டார். அந்தவயிற்றெரிச்சலை வருணிப்

பானேன்உலகநாதருக்கும் எனக்கும் திருமணம் நடந்தது. ஆமாம், வாழ்க்கையை ஒப்பந்தம் செய்துவைக்கப்பட்டேன். அதன் பெயர் திருமணமா? கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டுக் கரடியோடு கொஞ்சு என்று கட்டளை இடுவதற்குப் பெயர்தான் 'திருமண' மென்றால், எனக்கு நடந்ததும் திருமணம்தான். விஷத்தை வேலில் தடவி விழியில் செருகுவதற்குப் பெயர்தான் 'வாழ்க்கை ஒப்பந்தம்' என்றால் எனக்கு நடந்ததும் வாழ்க்கை ஒப்பந்தந்தான்!

உலகநாதர் எனக்குக் காண்டாமிருகமாகத் தோன்றினாரே யொழியக் கணவனாகக் காட்சியளிக்கவில்லை. உலகத்தின் விகாரமே உருப்பெற்றெழுந்ததுதான் உலகநாதர். நான் என்ன செய்வேன்! அவருக்கு என்னவோ இளமை இருந்தது உண்மை. ஆனால், என் இதயத்தைக் கவரும் இன்ப முகம் கிடையாதே! அவர் வாலிப முறுக்குள்ளவர்தான். ஆனால், அந்த வடிவம் வராகத்தைப் பழிப்பது போலவா இருக்கவேண்டும்? இவைகளை நான் பொறுத்துக் கொள்ளக்கூடாதா என்று நீங்கள் கேட்பீர்கள். 'புல்லென்றாலும் புருஷன், கல்லென்றாலும் கணவன்' என்று புராணக் காலட்சேபங்கூட நடத்துவீர்கள். என் நிலையில் நீங்கள் இருந்து பார்த்தால் அப்படிப் பேச மாட்டீர்கள். உலகநாதரின் குரலைப் பற்றி ஒரே ஒரு வார்த்தை, வாயைத் திறந்தாலே போதும், வாந்தி யெடுப்பவனுக்கு வயிற்றிலிருந்து கிளம்புவது போன்ற வறட்டுச் சப்தம். அதைக் கோகிலத் தொனி என்றுதான் கூறிக் கொள்ள வேண்டுமா? நீங்கள்தான் தீர்ப்புக் கூறுங்களேன். என்னைப் பற்றி நானே கூறிக்கொள்வதாக எண்ணாதீர்கள். ஒரு பணக்கார வீட்டுப் பெண், போதுமான அழகுடையவள், இளமையின் எழுச்சியிலே, இன்பத்தின் அடிவாரத்தில் உலாவத் தொடங்குபவள், 'எண்ணாத எண்ணங்கள் எண்ணியவள்' எதிர்காலத்தைப் பற்றி எட்டாத 'பேராசைக் கோட்டைகள்' கட்டியவள், "கண்ணம்மாளா? கட்டழகியாயிற்றே! கட்டுடல் வாய்ந்தவளாயிற்றே?" என்று ஊராரின் மதிப்புரையைப் பெற்றவள்-கடைசியில் கண்ணராவியான மனிதனைக் கட்டிக் கொள்வதென்றால் அது நியாயமா? பச்சிளங் குழந்தையும் பரிகாசஞ் செய்யுமே! தோழிகள் 'தூ' என்று துப்புவார்களே!

இது என்ன வராகவதாரத்தைக் கண்டு பூமாதேவி விரகதாபங் கொண்ட காலமா? அதுவுமில்லையே! என்னை விபச்சாரி என்று கூறுகிறீர்களே! எனக்கு அந்த வாழ்வை அமைத்துக் கொடுத்தது உங்கள் வைதீக உலகந்தானே!

வாழ்வில் கோணல் ஏற்பட்டுவிட்டதே என்று வாடினேன்; வதங்கினேன். ஆனால் அதை உலகநாதரிடம் காட்டிக் கொள்ளவில்லை. என் தாய் தந்தையரைச் சபித்துக்கொண்டிருந்தேன், என் சாபங்களுக்கு மட்டும் சக்தி இருந்திருக்குமானால், இந்த உலகமே அழிந்துபோயிருக்கும். என் தாயகத்திலிருந்து சீதனங்கள்

வந்து குவிந்தன. கட்டில்களென்ன, கம்மல்கள் என்ன, ஏதேதோ வழங்கினர்கள். வழக்கத்தை விடாமல் செய்துவிட்டார்கள் ; அவ்வளவுதான். அவர்கள் அள்ளி அள்ளிக் கொடுத்த அவ்வளவும் எனக்குத் தேவையில்லை. என் கருத்துக்கேற்றவரைத் தேடித் தராத அந்தப் 'பெற்ற பேய்கள்' எனக்கு எதை வாரிக் கொடுத்தால்தான் என்ன ? ஓர் ஆணழகரை மட்டும் எனக்குத் துணைவராகச் சேர்த்திருந்தால் போதுமே! சீதனமா வேண்டும், எனக்குச் சீதனம் !

பார்த்தேன். வண்டிக்கார வீரனின் வாட்டத்தைப் போக்க முன்வந்தேன். வெற்றி பெற்ற வீருப்பில் பெருமூச்சு விட்டேன். அகழ் பல கடந்து, அரும்பாடுபட்டு, அந்நியனுடைய கோட்டையைக் கைப்பற்றியது போல ஆனந்தங்கொண்டேன். இதய வீதியில் எண்ணப் பட்டாளம் ஜெயபேரிகை முழங்கிச் சென்றது. குனிந்துகிடந்த என் இளமை கொக்கரித்துக் கொடியேற்றிப் புறப்பட்டது. ''என்னடி வேசி ! அளக்க ஆரம்பித்துவிட்டாய்'' என்று ஆத்திரப்படுகிறீர்களா ? சற்றுப் பொறுங்கள். இதோ பாருங்கள், வீரனுக்கும் உலகநாதருக்கும் உள்ள வித்தியாசங்களை!

உலகநாதரிடம் இளமை மட்டுமிருந்தது, வீரனிடம் அந்த இளமைக்கேற்ற அழகு இருந்தது ! உலகநாதர் உருட்டுச் சட்டிப் பொம்மை ; வீரன் வடிவழகன் ! உலகநாதர் உன்மத்தர் ; வீரன் விவேகி ! உலகநாதரிடம் செல்வம் மிகுந்தது ; சிங்காரமில்லை ! வீரன் ஏழைதான்; ஆனுல், எழில்மிக்கவன். எனக்கு வேண்டியது அதுதானே ! உலகநாதரின் குரலில் ஒரே கரகரப்பு; வீரனின் தொனியில் வீணை கிளப்பும் ஒலி ! உலகநாதரின் கண்களுக்கு ஆந்தை அருமையான உதாரணம் ; வீரனின் கண்களோ என் விலாவைக் குத்தி வேதனை கிளப்பிய வேல்கள் ! உலகநாதரின் பல்வரிசை பார்க்கப் பயங்கரம் ; வீரனின் பற்களோ முத்துக் கோவை !

அவ்வளவு ஏன் ? வீரன் என்னை இந்திர விமானத்தில் இட்டுச் சென்றுன், இன்பபுரியில் சுற்றுப் பிரயாணம் செய்ய !

வீரனுக்கும் எனக்கும் தொடர்பு இருப்பதை உலகநாதர் அறியவே இல்லை. அவர் அறியாதபடியே நான் நடந்துகொண்டேன். அவரது ஆசை மனைவிபோல நடந்தேன். அவரைக் கடவுளாகக் கருதுவதாகக் கூறினேன். பாதங்களைக் கண்களில் ஒற்றிக்கொண்டேன். பாசமுள்ள பத்தினிபோல் பாசாங்கு செய்தேன். உலகநாதர் என்னை நம்பியே இருந்தார். இவ்வளவு நாடகமும் நான் ஆடாவிட்டால் அவர் என்னை நம்புவாரா? தலையை வலிக்கிறது என்று சொல்வார் ; எனக்கே வலி ஏற்பட்டதாக வருத்தத்தை வரவழைத்துக்கொள்வேன். அவர் நன்றுக ஏமாந்துவிடுவார். ஏமாறட்டுமே, எனக்கென்ன !

வீரன் என் வலையில் சாதாரணமாக விழுவேன் என்ருனு ? அப்பப்பா ! எவ்வளவு கஷ்டம் ! எஜமானி அம்மாள் ஆயிற்றே என்று முதலில் பார்த்தான். பெரிய இடத்து விஷயமாயிற்றே என்று கலங்கினுன். 'ஒய்யாரக் கொண்டையாம் தாழம்பூவாம் உள்ளே இருக்குமாம் ஈரும் பேனும்' என்பதை அவன் எப்படி அறிவான்? பாவம் !

எப்படியோ காரியம் கைகூடிற்று. என் கணவர் அடிக்கடி வெளியூர் சென்றுவிடுவார். வாசலில் கைகட்டி நிற்கும் வண்டிக் காரனுக்கு, ரயிலுக்கு வண்டி கொண்டுபோகும் வேலை மட்டுந் தானு ? என்னை வட்டமிடும் வேலையும் வந்து சேர்ந்தது. உலக நாதர் ஊரிலே ; நானும் வீரனும் உல்லாசபுரியிலே ! அவர் காட்டிலோ மேட்டிலோ அலைவார். அதைப் பற்றிக் கவலை யில்லை ; நாங்கள் கட்டிலிலே !

வீரனுக்கு முதலில் என்னைத் தீண்டுவதற்குப் பயம் ; தீண்டிய பிற்பாடு அய்யா பார்த்துவிடுவாரோ என்ற அச்சம் ; சங்கதி பரவி விடுமோ என்ற சந்தேகம் ; கடைசியில் அவர் எப்பொழுது வெளி யூர் செல்வார் என்ற ஏக்கம் ! இந்த நிலைமையில் எங்கள் காதல் வளர்ந்தது. மாதங்கள் ஒன்று . . இரண்டு . . இப்படிப் பல மாதங் கள்; ஏன், இரண்டு மூன்று வருடங்களும் ஆகிவிட்டன. இதில் இன்னொரு பயங்கரமும் நடந்துவிட்டது. நானும் வீரனும் சேர்ந்து கொலையும் செய்துவிட்டோம். என் வயிற்றில் வளர்ந்த இரண்டரை மாதச் சிசுவை யமலோகத்திற்கு அனுப்பினேம். அதற்கு வீரன்தான் மருந்து வாங்கிக்கொண்டுவந்து கொடுத் தான். பிறக்கும் குழந்தை வீரனைப்போல் இருந்து விட்டால் என்ன செய்வது என்ற பயமே கொலைக்குக் காரணம். இப்பொழுது நீங்கள் சொல்லுங்கள், கண்ணம்மா ஒரு கொலைகாரி என்று! அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. என் உடம்பில் ஏதாவது கூச்சம் இருந்தால்தானே ! என் மனசுதான் மரத்துப்போய்விட்டதே !

குழந்தையை அழித்த சில நாட்களுக்குப் பிறகு வீரனுக்கும் எனக்கும் நடுவே ஒரு தொய்வு ஏற்பட்டது.

திடீரென்று வீரன் என்னுடன் பேசுவதை நிறுத்திவிட்டான். என்னைக் கண்டாலே பிடிக்காதவன் போல் நடந்துகொண்டான். நான் ஏதாவது கேட்டால் 'வெடுக்'கென்று பதிலைச் சொல்லிவிட்டு நகர்ந்துவிடுவான். எத்தனையோ முறை உலகநாதர் வெளியூர் சென்று வந்தார். நான் அந்த நேரங்களையெல்லாம் தனியாகவே கழித்து வந்தேன். பலமுறை வீரனுக்கு ஆள் அனுப்பிப் பார்த் தேன். அவசரச் செய்தி என்று கூப்பிட்டேன். ஒன்றுக்கும் அவன் அசையவில்லை. காரணம் தெரியாது தவித்தேன்.

என்னுடைய கலக்கத்தைக் கண்டு என் கணவர், ''என்ன கண்ணம்மா வருத்தம்?'' என்று கேட்டார். ''ஒன்றுமில்லை, உடம்பு சரியில்லை'' என்பேன். உடனே அவர் எனக்குச் சிகிச்சை

செய்ய ஆரம்பிப்பார். அவர் அறிந்துகொள்ள முடியாத நோய் எனக்கு ! அதை நீக்க அவர் கொண்டுவந்து தர முடியாத மருந்து ஒன்று இருந்தது. அதை அவர் எப்படி அறிவார் பாவம் ! இந்த நிலையிலே ஒரு சில மாதங்கள் ஓடின.

என்னுடன் பட்சமாயிருந்த உலகநாதரும் திடீரென்று மாறி விட்டார். எப்பொழுதும் சிந்தனை ; எப்பொழுதும் வெறுப்பு; எப்பொழுதும் கடு கடுப்பு !

சாதாரண வேளையிலேயே என் நாயகரைப் பார்க்க ஆயிரம் கண்கள் வேண்டும். அதுவும் இந்த நிலைமையிலே எப்படி இருப்பார் என்று நான் சொல்லவும் வேண்டுமா ? அவர் அப்படி ஒரேயடியாக மாறிவிட்டதற்கு எனக்குக் காரணம் புரியவில்லை. ஒரு வேளை வீரனுக்கும் எனக்கும் உள்ள 'இரகசியம்' அம்பலமாகி விட்டதோ என்று நடுக்கமுற்றேன். அல்லது வேறு ஏதாவது புதுவித வியாதியோ என்று ஐயமுற்றேன். நான் எந்த முடிவுக்கும் வர முடியவில்லை. ஒரு பக்கம் வீரன் இல்லா வாழ்வு; இன்னொரு பக்கம் உலகநாதர் பற்றிய ஆராய்ச்சி ! இரண்டுக்கும் நடுவில் நின்று தவித்தேன். உலகநாதரிடம் எவ்வளவோ கேட்டுப் பார்த்தேன். அவர் மௌனமே சாதித்தார்.

ஒருநாள் இரவு 9 மணி இருக்கும். உலகநாதர் எங்கேயோ போய்விட்டு வீட்டுக்கு வந்தார். ஊஞ்சலில் உட்கார்ந்தார். நானும் அவர் அருகிலே அமர்ந்தேன். அவருடைய முகத்தைக் காணச் சகிக்கவில்லை. அந்த அகண்ட சச்சிதானந்த விழிகளைப் புருவத்தின் பக்கம் ஏற்றி எங்கேயோ யோசனையை ஓட்டிக்கொண் டிருந்தார். நான் நடிக்க ஆரம்பித்தேன். ஊஞ்சலிலிருந்து கீழே விழுந்துவிட்டேன். உண்மையாக அல்ல, உலகநாதரை ஏமாற்ற. உலகநாதர் என்னை வாரி எடுத்துத் தடவிக் கொடுத் தார். அந்த ஸ்பரிசத்தால் என் வலி நீங்கும் என்று அவர் எண்ணியிருக்கலாம். 'வீரன் இருக்கவேண்டிய இடத்தில் இந்த வீணனு ?' என்று என் மனம் துடித்துக்கொண்டிருந்ததை அவர் எப்படி அறிவார் ? மறுபடியும் ஊஞ்சலில் உட்கார்ந்தோம். ஊஞ்சல் அசைந்தது; உலகநாதரும் பேச்சை ஆரம்பித்தார்.

எங்கள் பண்ணையிலே தலையாரி உத்தண்டி என்று ஒரு கிழவன் வேலை பார்த்து வந்தான். அவனுக்கு ஒரு மகள். அவள் பெயர் குமுதம். அந்தக் குமுதம் அழகிதான். அந்தக் குமுதத்தின் மேல் என் பிராணபதிக்கு மோகம் ஏற்பட்டுவிட்டது. என்னைத் திருப்திப்படுத்தமுடியாத அந்த அழகு துரை, குமுதத்தின்மேல் பாய்ந்துவிட்டார். பணக்காரரல்லவா ? பார்த்த பெண்களை எல்லாம் காதலிப்பதுதானே பணக்காரத் தத்துவம். குமுதத் தோடு கொஞ்சவேண்டுமென்று என்னிடம் கூறினர். தாராள மாகச் செய்வதுதானே, என்று என் விருப்பத்தை வெளியிட்டேன். அதற்கு ஒரு தடங்கல் இருக்கிறதென்ருர். என்ன தடை என்று

நான் கேட்டேன். அவர் அதைச் சொன்னார். வீரன் என்னை மறந்து விட்டதன் இரகசியத்தை அப்பொழுதுதான் தெரிந்து கொண்டேன்.

உலகநாதர் விரும்பிய குமுதாவுக்கு ஓர் அத்தான் உண்டு. அவன்தான் என்னை அடிமைகொண்ட அன்பன் வீரன்! ''குமுதாவுக்கும் வீரனுக்கும் காதலாம். இருவரும் கல்யாணம் செய்து கொள்ள முடிவு செய்துவிட்டார்களாம். கல்யாணமும் சீக்கிரம் முடியப்போகிறது'' என்று உலகநாதர் கூறினார். அந்தச் சமயத்தில் என் முகத்தில் தோன்றிய கீறல்களை உலகநாதர் பார்த்திருந்தால் ஆச்சரியப்பட்டிருப்பார். நான் இறந்துபோய்விட்டதாகவே கருதினேன். ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு, ''வீரனுக்கும் குமுதாவுக்கும் காதல் என்று உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டேன். குடியானவத்தெரு கொல்லைக்குளத்து வாய்க்கால் ஓரத்தில் இருவரும் ரகசியம் பேசிக்கொண்டிருந்ததைத் தாம் கண்டதாக என் கணவர் கூறினார். அதோடு உலகநாதர் நிற்கவில்லை. ''கண்ணம்மா! என் கண்ணல்ல.... நான் உன்னை அலட்சியப்படுத்துவதாக நினைக்காதே! எப்படியாவது ஒரு நாள்....குமுதா என் படுக்கையை அலங்கரிக்கவேண்டும். இதை நீதான் செய்யவேண்டும். தயவு செய்! தாளைப் பிடிக்கிறேன். இரங்கமாட்டாயா?'' என்று கெஞ்சினார், கதறினார், பல்லைக் காட்டிப் பிச்சைக் கேட்டார். எனக்கும் ஒரு யோசனை தோன்றிற்று; அது மிகவும் அருமையான ஒரு யோசனையாகத்தான் முடிந்தது.

குமுதாவையும் வீரனையும் பிரித்துவிட்டால் மீண்டும் என்னை நெருங்குவான் என்று தீர்மானித்தேன். குமுதாவை உலகநாதரிடம் அளித்துவிட்டால் அவளிடமே குலவிக் கிடப்பார். வீரனும் நானும் வேறு அந்தப்புரம் அமைத்துக்கொள்ளலாம். அவர் அதைக் கவனிக்க முனையமாட்டார் என்று முடிவுகட்டினேன். ஆகவே, குமுதாவை என் கணவருக்குக் கட்டிவைக்க யோசனை சொல்லிக் கொடுத்தேன். குமுதாவை ஒரு விபசாரியாக்குவதன் மூலம் இழந்த வீரனை இழுத்துவிடலாமென்ற தைரியம் எனக்கு! ''அடி துரோகி! நீ கெட்டதோடு இருக்கக்கூடாதா? குமுதாவையுமா அப்படிச் செய்ய வேண்டும்?'' என்று கேட்கிறீர்களா? அதற்கு நான் என்ன செய்வேன்? என் வீரனை அடைய வேறு வழி ஏது? குமுதா வேண்டுமானால் தன் கற்பின் திறமையைக் காட்டுவதுதானே!

மறுநாள் பொழுது விடிந்தது. என் யோசனைப்படி உலகநாதர் உத்தண்டிக் கிழவனைக் கூப்பிட்டு அனுப்பினார். குமுதா வீட்டில் வேலை செய்ய வேண்டும் என்றும், எனக்குத் துணையாகச் சில நாட்களுக்கு இருக்க வேண்டுமென்றும் சொன்னார். கிழவன் சிறிது தடுமாறினான். குமுதாவுக்கு மாதச் சம்ப

ளம் இருபது ரூபாய் என்று குறிப்பிட்டார். கிழவன் ஏமாந்து விட்டான். பணத்தைப் பார்க்காதவன்தானே அந்தப் பஞ்சை! குமுதாவை எங்கள் வீட்டு வேலைக்காரியாக அனுப்பிவிட்டான். குமுதாவை நான் இரண்டு வருடங்களுக்கு முன்பு பார்த்தது. ஆனால், இப்பொழுது குமுதா பருவம் அடைந்த மங்கை. அவளது லாவகமான நடையும், முகத்தின் களையும் பெண்ணான என்னையே ஆசைப்பட வைத்தன.

குமுதா வீட்டுக்கு வந்ததுமுதல் மிகவும் மரியாதையாகவே பழகினாள். அவளுடைய சிந்தனை மட்டும் எங்கேயோ இருந்தது. அதை அவளால் மறைத்துக்கொள்ள முடியவில்லை. அடிக்கடி வாசல் பக்கம் செல்வாள். எங்கேயோ சுற்றுமுற்றும் பார்ப்பாள். எனக்கல்லவா தெரியும், அவள் யாரைப் பார்க்கிறாள் என்று! அந்தச் சிறுமி வீரனிடம் கொண்டிருந்த கள்ளங்கவடமற்ற காதலில் நான் நச்சுப் பொடி தூவத் தயாராயிருந்தேன்.

குமுதா வீட்டிற்கு வந்து இரண்டு நாட்கள் கழிந்தன. ஒரு நாள் இரவு நான் அவளோடு சம்பாஷணை துவக்கினேன். இதற்குள் என் கணவர் பட்டபாட்டை நினைத்துக்கொண்டு நானே சிரித்தேன். குமுதா தன் வீட்டுக் கதைகளை எல்லாம் சொன்னாள். நான் அவள் பேச்சில் என் பசப்பு வார்த்தைகளைப் பின்னிக்கொண்டே வந்தேன். எங்கெங்கோ ஆரம்பித்துக் கடைசியில் உலகநாதர் குமுதாவிடம் கொண்டிருக்கும் ஆசைவரையில் கூறிவிட்டேன். குமுதா ஒன்றும் பேசவில்லை! பேசாமற் போய்ப் படுத்துக் கொண்டாள். சற்று நேரத்துக்குப் பிறகு குமுதா விம்மி விம்மி அழுத சப்தம் மட்டும் எனக்குக் கேட்டது. அன்றிரவு அதோடு முடிந்தது.

மறுநாள் காலை கொல்லைப்புறத் தோட்டத்தில் குமுதா தன் தகப்பனுடன் பேசிக்கொண்டிருந்தாள். குட்டி தப்பித்துக் கொள்வாளோ என்ற பயம் எனக்கு. ''குமுதா ! குமுதா !'' என்று அதட்டலாகக் கூப்பிட்டேன். ஓடிவந்துவிட்டாள். எனக்குத் தெரியாமல் அவள் கண்களைத் துடைத்துக்கொண்டதை நான் பார்க்காமல் இல்லை. வீரனை நான் மறுபடியும் அடையும் பொருட்டு குமுதாவை என்ன செய்தால் என்ன ? என்னை வந்தடையும் பழிபாவங்களுக்கு நானா பொறுப்பாளி? 'எண்ணியபடி எதுவும் நடக்காது' என்ற சட்டமும், 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்ற உறுதியும் இருக்கிற உலகத்திலே நான் ஒரு குற்றமற்றவள்தானே ! இந்தத் தைரியத்தில் நான் குமுதாவின் நல்வாழ்வில் நஞ்சைக் கலந்தேன். அந்தக் காரியத்தைச் செய்யும் போது என் உடல் பதறவில்லைதான். தோட்டத்தில் உத்தண்டியைச் சந்தித்து, குமுதா பேசிய அன்றிரவே நான் அந்தச் சதியைச் செய்தேன். உங்கள் பாஷைப்படி அது 'சதி'யாக இருக்கலாம்.

ஆனுல், அந்தக் காரியம்தான் என் தலைவிதியைத் தலைகீழாக மாற்றிய மாபெரும் புரட்சி ! என் சுயநலத்துக்காகக் குமுதாவைக் கொலை செய்தால்தான் என்ன ?

**குமுதா :**

வேண்டுமானுல் என்னைக் கொலை செய்திருக்கலாம். சந்தோஷத்தோடு செத்திருப்பேன். ஆறிலும் சாவுதான், நூறிலும் சாவுதான். ஆனுல், எனக்கு வாழ்க்கையிலே ஆசை ஏற்பட்ட பிறகு சாகத் துணிவது சாமான்யமாகத் தோன்ருமல்தான் இருந்தது. கண்ணம்மா செய்த வேலை என்னை ஒரு வீராங்கனையாக்கிவிட்டது. சாவோடு விளையாடத் தயாராகிவிட்டேன். ''ஏன் இந்த முடிவுக்கு வந்தாள் குமுதா ?'' என்று நீங்கள் சந்தேகப்படுவீர்கள். முதலில் என்னைப்பற்றிய குறிப்பைப் படியுங்கள்.

நான் உத்தண்டியின் மகள். குழந்தையாயிருக்கும்பொழுதே தாயார் இறந்துவிட்டார். என் குலத்திலே இல்லாத வழக்கமாக எனக்கு ஐந்தாவது வகுப்பு வரையில் கல்வி கற்றுக் கொடுக்கப்பட்டது. அந்த ஆரம்பப் படிப்பை வைத்துக்கொண்டுதான் இந்தக் கடிதத்தை எழுதுகிறேன். ஆனுல், எனக்கு ஒரு விருப்பம் இந்தக் கடிதத்தை என் அத்தான் படிக்காவிட்டாலும் யார் கையிலாவது அகப்பட்டு நான் குற்றமற்ற நிரபராதி என்பது ருசுவாகிவிட்டால் போதும். உலகத்திலே ஒருவராவது 'குமுதா குற்றமில்லாத பெண்' என்று கூறமாட்டார்களா ?

நான் குறைவாகப் படித்த பெண்தான். படித்திருந்தாலும் பரந்த மனப்பான்மை உள்ளவள். நாகரிகத்தின் நாச வேலைகளால் உள்ளத்தைக் குரங்கைப்போல ஆக்கிக்கொண்ட பெண்களின் இனத்தைச் சேர்ந்தவள் நானல்ல என்பதை நீங்கள் கட்டாயம் நம்பவேண்டும். இந்த உலகத்திலே எத்தனையோ குமரிகள் தங்கள் வாழ்க்கையைத் தாங்களாகவே வீணுக்கிக்கொள்கிருர்களே! எனக்கு ஏற்பட்ட நிலைமை நானுகத் தேடிக்கொண்டதல்ல.

வீரன் என் அத்தை மகன். அத்தான் படிக்காத ஆள். ஆனுல், என் வாழ்க்கைத் துணைவராக இருப்பதற்கு லாயக்குள்ளவர். அவரோடு ஆனந்தமாகக் காலத்தைக் கடத்தலாம் என்று நம்பினேன். நான் நினைத்ததிலே தவறில்லை. நம்பியதுதான் முட்டாள்தனமாகிவிட்டது. என் தகப்பனுர் என்னை வீரனுக்கு மணமுடிப்பதாகக் கூறிய பின்னரே நான் அவரோடு பழக ஆரம்பித்தேன். அதுவரை என் சிந்தனையில் எந்தத் துர் எண்ணங்களும் இடம் பெறவில்லை. அத்தானுடைய அழகுகளைப் பற்றி நான் கூறவே தேவையில்லை. அவருக்கு நான் அடிமையாகிவிட்டேன் என்ருல், அந்த ஒரு வார்த்தை போதாதா ? அத்தான் என்மேல் வைத்த ஆசை மாறக்கூடாதே என்பதற்கு வேண்டுமானுல் நான்

என்னைச் சிங்காரித்துக்கொள்வதுண்டு. வைர ஜோடிப்புகளா எனக்கு இருந்தன ? கொல்லையில் கிடக்கும் முல்லையும் தோட்டத்துத் தாழம்பூவுமே எனக்கு ஆபரணங்கள் ; கண்ணுடி வளையல்களைத்தான் என் கைகள் அறியும்.

எப்படியோ நானும் அத்தானும் ஒன்றுபட்டுவிட்டோம். அவர் என்னை உண்மையாகவே காதலித்தார். அவருக்குக் காதல் என்ருல் இன்னதென்று தெரியுமோ தெரியாதோ ! என்னை அடிமையாக்கிக்கொள்ள மட்டும் அவரிடம் ஒரு சக்தி இருந்தது. சதா என் இருதயப் பீடத்திலே அத்தானை அமரவைத்துப் பூஜித்துக்கொண்டிருந்தேன். அந்த இடத்திலே யாரும் எட்டிப் பார்க்கவும் முடியாது. அப்படி இருந்த அதே குமுதாதான் வெட்கமில்லாமல் இந்தக் கடிதத்தை எழுதுகிருள். நான் கடிதமா எழுதுகிறேன்! இல்லை, கதறுகிறேன் ! கடிதமா இது ! இல்லை, கண்ணீர்த் தேக்கம் ! எழுத்துக்களா இவைகள் ! இல்லை, இதயத்தைப் பொத்துக்கொண்டு பீரிட்டுக் கிளம்பிய இரத்தத் துளிகள் !

அன்றிரவு . . . . . . அய்யோ . . . . . . அதை நினைத்தாலே குலை நடுங்குகிறதே ! என் தகப்பன் ஆசையைக் கெடுக்காமல் உலகநாதர் வீட்டுக்கு வேலைக்காரியாகச் சென்றேன். கண்ணம்மா என்னை அவருக்கு வெள்ளாட்டியாக்க முயன்ருள். ஒருநாள் இரவு அந்தப் பேச்சை எடுத்தாள். புருஷனுக்குப் பெண் தேடும் அவசியம் அவளுக்கு ஏன் ஏற்பட்டதோ எனக்குத் தெரியாது. என்னென்னவோ தளுக்குமொழிகள் பேசினுள். நாசூக்காக என்னை நடத்தினுள். வெட்டப்போகிற கடாவுக்கு மஞ்சள் தெளித்து மாலை போடுகிருள் என்பதை நான் முதலில் புரிந்துகொள்ளவில்லை. விஷயத்தை உணர்ந்து விம்மினேன். வீரனிடம் அதைச் சொல்லித் தப்பித்துக்கொள்ளத் திட்டம் போட்டேன். வீரனைக் காணவே இல்லை. அப்பா வந்தார். அவரிடம் விஷயத்தை முழுவதும் சொல்ல முடியவில்லை. அதற்குள் எஜமானி கண்ணம்மா கூப்பிட்டுவிட்டாள் ; காரியம் மிஞ்சிவிட்டது.

அன்றிரவு மணி பத்து இருக்கும் ! உலகநாதர் ஊரில் இல்லை என்று கண்ணம்மா சொன்ஞள். எனக்குச் சற்று நிம்மதியாக இருந்தது. காலையில் எப்படியாவது என் வீட்டுக்கு ஓடிவிடலாமென்று தீர்மானித்துச் சந்தோஷப்பட்டேன்.

கண்ணம்மா அப்பொழுது எனக்கு ஒரு கட்டளையிட்டாள். சாதாரண வேலைதான் ; அதுதான் சதியாக முடிந்தது! புலியின் அகண்ட வாய்க்குள்ளே ஒரு பிள்ளையைத் தவழ்ந்து செல்லும்படி ஆணை பிறந்தது.

''வெள்ளிக்கோப்பை அந்த அறையிலே இருக்கிறது. அதை எடுத்துவா, குமுதா !'' என்றுதான் கண்ணம்மா கூறினுள். நான் அதை எடுத்துவர அறையில் நுழைந்தேன். திடீரெனக் கதவுகள்

மூடிக்கொண்டன. திரும்பிப் பார்த்தேன் ; உலகநாதர் நின்ரூர். நின்றது மட்டுமல்ல ; கலகலவெனச் சிரித்தார். ''தோற்ருய் குமுதா, தோற்ருய்'' என்று ஒரு பிசாசு அலறுவது போல் இருந்தது. என் நிலே தவறிவிட்டது. உலகமே கிறுகிறுவெனச் சுழன்றது. ஆகாய வெளியிலே ஒரு பயங்கரச் சப்தம் கேட்பது போல் தெரிந்தது! பல மின்னல்கள் ! இடி முழக்கங்கள் !

அதற்குப் பிறகு என்ன நடந்தது என்றே எனக்குத் தெரியாது. கண்ணே விழித்துப் பார்த்தேன். கட்டிலில் படுத்திருப்பதாக உணர்ந்தேன். அருகில் உலகநாதர் சயனித்திருந்தார். ஏதோ சூரிய மண்டலத்தையே சுற்றி வந்துவிட்டவர் போலச் சிரித்தார். என்னென்னவோ பேசினுர். எதுவும் என் காதில் விழவில்லே. காமாந்தகாரப் பூதத்தின் இரத்தந் தோய்ந்த நகங்களால் என் இதயம் கிழிக்கப்பட்டு விட்டது. அதனுடைய கடைவாய்ப் பற்களின் கூர்மை என்னேப் பிளந்தெறிந்தது. நான் இப்பொழுது ஒரு வேசி ! விபச்சாரி ! குமுதாவின் உடலே ஒருவன் ருசி பார்த்து விட்டான். என் உள்ளத்தை அந்த உன்மத்தன் அடிமைப்படுத்தவில்லே ; அதற்காக நான் பரிசுத்த மனுஷி என்று பறைசாற்றிக் கொள்ள முடியுமா ?

இராமாயணத்திலே சீதை, ''ராமப்பிரபூ ! இராவணன் என் உடலேத் தீண்டினனே தவிர உள்ளத்தைத் தீண்டவில்லே'' என்று கூறித் தப்பித்துக்கொண்டாளாம். அதுபோல வீரனிடம் நல்ல பெயர் வாங்க நினேக்கவில்லே. இன்னெருவன் தொட்ட குமுதாவைக் கபடமற்ற வீரன் தொடுவதா ? அன்னியனுடைய எச்சிலே அத்தானுக்கு வழங்குவதா ? பக்கத்திலே இருந்தான் ; பார்த்தேன். வெற்றிச்சிரிப்புச் சிரித்தான் ; நான் வெகுளவில்லே. அணேத்தான் ; அடங்கிவிட்டேன், பலாத்காரச் செயல்தான் ! தடுக்கும் தைரியம் எனக்கு வரவே இல்லே. ''ஏண்டி குமுதா ! உன்னேமீறியா ஒன்று நடந்துவிடும் ?'' என்று கேட்பீர்கள் ; உண்மைதான். ஆனுல், நடந்துவிட்டதே, என்ன செய்வேன் ?

புளிப்புக் கலந்த பாலாகிவிட்டேன் ; விஷங்கலந்த உணவாகி வீட்டேன். ஆனுல் நான் விபச்சாரியாக வாழ நினேக்கவில்லேயே! அதற்காக நீங்கள் இரங்கலாகாதா ? என்னே மன்னிக்கக்கூடாதா? என் கடிதத்தை மறுமுறையும் படித்துப் பாருங்கள். கண்ணம்மா என்னே வஞ்சித்தாள் ! 'பெரிய இடத்துப் பெண்மணி' இந்த வேலே செய்தாள் ; செல்வந்தர் வீட்டுச் சீமாட்டி சதி புரிந்தாள். தன் கணவனேத் தாசிவீட்டுக்குத் தூக்கிச் சென்றதாக நான் நளாயினி கதை படித்ததுண்டு. இந்தக் கலியுக நளாயினி என்னேயே அவள் கணவனுக்குக் காணிக்கையாக்குவாள் என்று நான் கருதவில்லே.

என்னையே அவள் கணவனுக்குக் காணிக்கையாக்குவாள் என்று நான் கருதவில்லை.

இனி இந்த விபச்சாரிக்கு ஏன் வாழ்வு ? வைர நகை போட்டறியாத குமுதா வைரத்தையே பொடி செய்து சாப்பிட்டு விட்டாள். ஆம், எஜமானியம்மாவின் வைர மூக்குத்தியைத் தூள் செய்து சாப்பிட்டுவிட்டேன். எந்த எஜமானி என்னை அவளது கணவனின் கட்டிலறைக்கு அனுப்பினளோ, அதே எஜமானியின் மூக்குத்தி என்னைக் கைலாசத்திற்கும் அனுப்பட்டும்.

அத்தான் ! என்னை மன்னித்துவிடுங்கள். குமுதா அழுக்குப் பட்டவள் ; களங்கமடைந்தவள். அவளை மறந்துவிடுங்கள் !

மனித சமூகமே! நீ இனிமேலாவது உலகநாதர்களை உற்பத்தி செய்யாமல் இருக்கமாட்டாயா ? கண்ணம்மாக்களைக் காசினிக்கு அனுப்பாமலிருக்கமாட்டாயா ? அந்த வேண்டுகோளின்மீது என் உயிரை உனக்கு அர்ப்பணிக்கிறேன். என் உடலை மண்ணுக்கு கிறேன்.

அத்தான் ! அத்தான்!!
இப்படிக்கு
இறக்கப்போகும்
குமுதா.

**வீரன்:**

'அத்தான் ! அத்தான் !'' என்ன வேண்டியிருக்கு? அத்தான் ! அந்தப்பாதகி என்னை அப்படியா வஞ்சிப்பது ? படிக்காத முட்டாள் தானே என்ற எண்ணமா அவளுக்கு ! குழந்தையிலிருந்து குமுதா என்றால் எனக்கு அலாதிப் பிரியம். அவளுக்கும் அப்படித்தான்.

''அப்படிப்பட்ட குமுதாவை ஏண்டா வீரா, பாதகி என்று கூறுகிறாய்?'' என்று நீங்கள் கேட்பது சகஜம். அதற்குமுன் என் வரலாற்றைக் கேளுங்கள். என் வரலாறு வேடிக்கையானது. வண்டிபோகும் பாதையைப்போல வளைவுகள் நிரம்பியது. மேடு பள்ளங்கள், குண்டு குழிகள் ஏராளம்.

உத்தண்டி மாமா, உலகநாதர் பண்ணைத் தலையாரி. அவருடைய மகள்தான் குமுதம். குமுதத்தை எனக்குக் கட்டிக் கொடுப்பதாக உத்தண்டி மாமா உறுதி கூறியிருந்தார். நான் குமுதாவைக் கல்யாணம் செய்துகொள்வதாயிருந்தால் ஏதாவது சம்பாதிக்கும் வழியைத் தேட வேண்டாமா என்று யோசித்தேன். அதற்காக உத்தண்டி மாமா சிபாரிசு செய்தார். உலகநாதர் வீட்டு வண்டிக்காரனாக அமர்ந்தேன். வண்டிக்கார உத்தியோகத்திற்கு ஊதியம் மாதம் ஐந்து ரூபாய். உலகநாதர் வீட்டிலேயே சாப்பாடு. வண்டிக்காரனுக்கு வாய்க்காத சுகம் வலுவில் வந்தது. அடிக்கடி எஜமானர் ஊருக்குப் போவார்.

எஜமானர் ஊருக்குப் போய்விட்டால் கண்ணம்மா எனக்குச் செய்யும் உபகாரங்கள் பலமாயிருக்கும். வெகுநாள் வரையில் எனக்கு அது ஏன் என்று புரியவில்லை.

ஒரு நாள் கண்ணம்மா, உலகநாதருக்கு வீட்டைப் பற்றிய கவலையே இல்லை என்று குறைப்பட ஆரம்பித்தாள். ''ஆமாங்க அண்ணி'' என்று நான் தலையசைத்தேன். இன்னொரு நாள், ''உலகநாதர் நடத்தையே சரியில்லை வீரா !'' என்று கண்ணம்மா கூறினாள். அதற்கும் ஆமாம் போட்டுவிட்டு நகர்ந்தேன். ''உட்காரு வீரா ! அவரும் ஊரிலில்லை. ஏதாவது ஊர்க்கதை இருந்தால் சொல்லு'' என்று வற்புறுத்தினாள். இரவு பத்துமணி வரையில் என்னென்னவோ வம்பளந்தாள் ; பிறகு வீட்டுக்குத் திரும்பிவிட்டேன். எனக்கு வீடு ஏது ? மாமன் வீட்டுத் திண்ணையில்தான் படுக்கை.

மற்றொருநாள், ''உலகநாதரைக் கண்டாலே எனக்குப் பிடிக்கிறதில்லை; சுத்த அசடு !'' என்று கண்ணம்மா கதையைத் துவக்கினாள். நானும் உட்கார்ந்து கதையைக் கேட்டுக்கொண்டிருந்தேன். உலகநாதரோடு வாழ்க்கை நடத்துவதே கசப்பாக இருக்கிறது'' என்று முடித்தாள் ; ''எல்லாம் சரியாகிவிடும் அம்மா'' என்று சொல்லிவிட்டு எழுந்தேன். ''என்னப்பா அவசரம்'' என்று என் துண்டைப் பிடித்து இழுத்தாள் கண்ணம்மா. எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

பெரிய இடத்துப் பெண்ணுடன், அதுவும் இளம்வயதுள்ள பெண்ணுடன், உட்கார்ந்து பேசிக்கொண்டிருப்பதே எனக்குப் பயத்தைக் கொடுத்து வந்தது. நிலைமை இப்படி விபரீதமாகிவிட்ட பிறகு என்னால் என்ன செய்ய முடியும் ? ''விடுங்கள் அம்மா'' என்று கூற வாயைத் திறந்தேன். வாயில் நீரில்லை ; வற்றி விட்டது. நாக்கை அசைக்கவும் முடியவில்லை. ஈரமில்லாத தொண்டைக் குழியில் ஏதோ ஒரு தொந்தரவு ஏற்பட்டது போல் இருந்தது. அதற்குள் நான் மெய்ம்மறந்துவிட்டேன். கண்ணம்மாவின் கரங்கள் என் தலையைக் கோதிக்கொண்டிருந்தன. என் 'முண்டாசு' அவிழ்ந்து விழுந்துவிட்டதையும் அப்பொழுதுதான் பார்த்தேன். ஒரு நல்ல இடத்துப் பெண் இவ்வளவு கேவலமாகப் போய்விட்டாளே என்ற ஆச்சரியத்தால் என் இருதயம் வாயு வேகத்தில் அடித்துக்கொண்டிருந்தது. உலகநாதர் பண்ணையைப் பற்றி ஊரிலே எவ்வளவு புகழ் ! அந்த வீட்டு அம்மாள் சாதாரண ஒரு கூலிக்காரனுக்கு ஆசைநாயகி ஆவதென்றால் எவ்வளவு மட்டரகமான தன்மை என்பதை முதலில் சிந்தித்தேன். சிந்தனை நீண்டநேரம் நிற்கவில்லை. சிசுப் பருவத்திலேயே சிதைந்துவிட்டது. எஜமானியம்மாளுக்கு விரோதமாக நடக்கவோ, விருப்பத்தை மறுக்கவோ எனக்கு மனம் வரவில்லை. தாட்சண்யத்திற்காகத்

தலையசைத்துவிட்டேன். குமுதாவின் மேலிருந்த அன்பைக்கூடக் கொஞ்சநாள் ஒத்திப்போட்டிருந்தேன். எனக்கும் கண்ணம்மாவுக்கும் - பிறகு கேட்க வேண்டியதில்லை; உலகநாதரைவிட என் பதவி ஒரு படி உயர்ந்ததாக மாறிவிட்டது! காலம் போனதே தெரியவில்லை. மகாராணியின் அன்பை ஒரு குதிரைக்காரன் பெற்றதாக 'ராஜா பர்த்ருஹரி' நாடகத்திலே பார்த்திருக்கிறேன்; அவனுக்கும் எனக்கும் என்ன வித்தியாசம்? உண்மையாகவே உலகநாதருக்கும் கண்ணம்மாவுக்குந்தான் பெருத்த வித்தியாசம். வண்டியிலே 'சண்டி' மாட்டையும் 'ஜாதி' மாட்டையும் ஒன்ருகக் கட்டி ஓட்ட முடியுமா? எப்படியோ கண்ணம்மாவுக்கு நான் தேவையான பொருளாகிவிட்டேன். அவள் எனது பாதங்களில் விழுந்து கிடந்தாள்.

ஒரு நாள் கண்ணம்மா என்னிடம் ஒரு துண்டுக் காகிதத்தைக் கொடுத்தாள். அதில் என்ன எழுதியிருக்கிறது என்று அவளை நான் கேட்டேன். ''ஒரு மருந்து'' என்ருள். அதோடு நிற்கவில்லை. ''எல்லாம் உன்னுல்தான்'' என்று கூறி உடம்பை லாவகமாக அசைத்தாள். ''புரியவில்லையே!'' என்று சொல்லி நான் விழித்தேன். பிறகு விவரத்தைச் சொன்ஞள். தார்க்குச்சியால் உடம்பில் 'சுரீர்' என்று குத்தியதுபோல் இருந்தது எனக்கு! அவளுக்குக் குழந்தை பிறந்தால் என்னைப் போலப் பிறந்துவிடும் என்ற பயம். இங்கிலீஷ் மருந்துக்கடையில் நான் அந்த மருந்தை வாங்கிவந்தேன். அதைக் கொடுக்கும்போது கடைக்காரர் என்னை வெறித்துப் பார்த்தார். நான் திரும்பிப் பார்க்காமலே வந்துவிட்டேன். கண்ணம்மா அதைச் சாப்பிட்டாள். கர்ப்பத்தைக் கருவோடு தொலைத்துவிட்டோம்.

இருந்தாற்போலிருந்து என் மனத்தில் ஏதோ ஒரு புயல் வீச ஆரம்பித்தது. வாழ்க்கை வண்டி பெரியதொரு பள்ளத்தில் சிக்கிக் கவிழ்வதுபோல் தெரிந்தது. கண்ணம்மாளையும் என்னையும் பற்றி ஊரில் ஏதேதோ பேசிக்கொள்வதாகக் காதில் விழுந்தது. பிறகு, கண்ணம்மாவுடன் பேசுவதை நிறுத்திவிட்டேன். அவளை நிமிர்ந்து பார்ப்பதுகூடக் கிடையாது.

எனது ஆசைகள் எல்லாம் குமுதாவிடம் திரும்பின. குமுதாவைக் கல்யாணம் செய்துகொள்ளும் நாளை எதிர்பார்த்துக் கிடந்தேன். தை மாதத்தில் கல்யாணத்தை முடிக்கப் போவதாக உத்தண்டி மாமா கூறினர். எனக்கு அடக்க முடியாத ஆனந்தம்! நான் குமுதாவை மனப்பூர்வமாக நம்பினேன். என்னை ஏமாற்ற மாட்டாளென்று எண்ணிக்கிடந்தேன். ஆனல் இலவு காத்த கிளியாக ஆகிவிட்டேன். குமுதா உலகநாதர் வீட்டுக்கு வேலைக்காரியாகப் போனுள். போகும்போதுகூட நானும் அவளும் வெகு நேரம் பேசிக்கொண்டிருந்தோம். அடிக்கடி தன்னைச் சந்திக்கும்

படிக் கூறினுள். இரண்டு சொட்டுக் கண்ணீர்கூட விட்டாள். எல்லாம் பசப்பு என்பது எனக்கு அப்போது புரியவில்லே. நான் அவளே நம்பி, எஜமானியையே புறக்கணித்து வந்தேன்.

ஆனுல்....அன்றிரவு....அடாடா....அதை நினைத்தாலே இரத்தம் கொதிக்கிறது. வண்டி மாடுகளுக்குத் தீனி வைத்து விட்டு வீட்டுக்குப் புறப்பட்டுக்கொண்டிருந்தேன். கண்ணம்மா ஓடி வந்தாள். என்னைப் பரபரவென்று இழுத்துக்கொண்டு வீட்டுக் குள் போனுள். எனக்கு ஒன்றுமே தோன்றவில்லே. திமிறிக் கொண்டு போகவும் முடியவில்லே. என்ன இருந்தாலும் பழைய கண்ணம்மா தானே! வீட்டின் தாழ்வாரத்திலுள்ள அறைப்பக்கம் இழுத்துச் சென்ருள். அறையின் ஜன்னலிலுள்ள துவாரத்தின் வழியாக என்னே உள்ளே பார்க்கச் சொன்னுள்; பார்த்தேன். அதைப் பார்த்தபோது என் மனம் பட்ட பாட்டை எப்படி வருணிக்கமுடியும்? கண்ணம்மா மட்டும் என்னே உடனே இழுத்துக் கொண்டு போய் விடாவிட்டால் அந்த அறை தூள்தூளாகியிருக் கும்; குமுதா என் கையால் இறந்திருப்பாள்!

''உன் ஆசைக் காதலி குமுதாவின் யோக்கியதையைப் பார்த்தாயா?'' என்று கேட்டாள் கண்ணம்மா.

நான் என்ன சொல்வது? குனிந்த தலே நிமிரவில்லே. என் உடல் சூடேறிப் போய்விட்டது. கண்ணம்மா மட்டும் என்னே அவளுடைய அறைக்கு அழைத்துச் சென்றிராவிட்டால் இரத்தக் கொதிப்பால் மாண்டிருப்பேன். என்னிடம் உயிரை வைத்திருப்ப தாகக் கூறிக்கொண்டிருந்த குமுதா, உலகநாதருடன் உல்லாசமா யிருப்பதை என் கண்களால் கண்டேன். சத்தியமாகச் சொல் கிறேன், குமுதா ஒரு விபச்சாரி!

எந்தக் கண்கள் குமுதாவைக் கனிவோடு பார்த்தனவோ, அந்தக் கண்கள் இரத்த நிறமாக மாறிவிட்டன. எந்தக் கரங்கள் அவளது மேனியைத் தொடத் துடித்தனவே, அந்தக் கரங்களே அவளே ஒடித்தெறியத் துடித்தன.

கண்ணம்மாவின் சமாதானத்திலுல் அடங்கினேன். கண்ணம்மா வுக்கு என் வாழ்க்கையைப்பற்றி இருக்கும் அக்கறை இந்தக் குமுதா வுக்கு இல்லேயே! இல்லாவிட்டாலும் பரவாயில்லே. என்னே இளிச்சவாயனுக ஆக்கிவிட்டாளே! இனிக் குமுதாவைவிட ஒரு வேசி உலகத்திலே பிறப்பாளா? பிறக்க முடியுமா? எனக்கு உயிரை அர்ப்பணிப்பேன் என்ருளே! உலகநாதருக்கு உடலே விற்றதை நான் நேரில் கண்டேனே, அதற்கு இனிச் சாட்சியா வேண்டும்?

மறுநாள் காலேயில் குமுதாவுக்குச் சரியான தண்டனே கிடைத் தது. அவள்செய்த குற்றத்தைக் கடவுள் பொறுப்பாரா? தெய்வமே சகிக்காத தவற்றையல்லவா அவள் செய்தாள்? அதற்குத்

தெய்வம் தந்த தண்டனை சரியான தண்டனை. குமுதாவுக்குக் காலரா கண்டுவிட்டது. வாந்தி பேதிக்கு இலக்கானுள், அந்த வஞ்சகி! கருப்பு மனம் படைத்த அந்தத் தாசியின் ஆபாச வாழ்க்கை அழிந்தது. என் சாபம் என்ன சாமான்யமானதா? ஏமாந்துபோனவன் கொடுத்த சாபமல்லவா? கைவிடப்பட்ட வீரனின் கோபாக்கினிக்கு அந்தக் கொலைகாரி இரையாக வேண்டியதுதானே நியாயம்! அவள் சாகும்போது நான் அருகில்தான் இருந்தேன்; என்னை இரண்டுமூன்று முறை பார்த்தாள். நான் அந்த இராட்சசியின் முகத்தில் விழிப்பதே பாபம் என்று கருதி, அந்த இடத்தை விட்டுப் போய்விட்டேன். பொழுது போவதற்குள் குமுதா போய்விட்டாள்.

என்னைக் கல்யாணம் செய்துகொண்டு ஊர்வலம் போகப் போகிறதாகச் சொல்லி, அதிலே தனக்கு ஆசையிருப்பதாக நடித்த அந்த நாசக்காரி பாடையில் பவனி போனுள். அதைப் பார்த்து நான் மகிழ்ந்தேன்.

உத்தண்டி மாமா கதறினுர். தெருவில் புரண்டார். பாவம், பெற்ற தோஷம்; புலம்பினுர். அந்த விபச்சாரியை இவர் ஏன் பெற்ருர்?

குமுதா இறந்துபோன அன்றிரவே நானும் கண்ணம்மாவும் ஒரு திட்டம் தயாரித்தோம். அதை அமுலுக்குக் கொண்டுவர அதுவே ஏற்ற நாளாயிற்று. அந்தத் திட்டந்தான் என்னை இவ்வளவு பெரிய அதிர்ஷ்டக்காரனுக ஆக்கிவிட்டது. இப்பொழுது என்னைப் பாருங்கள், நான் வண்டிக்கார வீரனு?

**உலகநாதர்:**

வண்டிக்கார வீரன்தான்! என் உப்பைத் தின்றவன்தான் இந்த வேலை செய்துவிட்டான். அவனைக் கோபித்துக்கொண்டு பயன் என்ன? எல்லாம் அந்தத் தாடகை செய்தவேலை. கண்ணம்மா என்னைக் கடவுளாகப் பாவிப்பதாகச் சொன்னுளே! அவளா இந்த வேலை செய்துவிட்டாள்? வீரனுக்கும் விபச்சாரி கண்ணம்மாவுக்கும் எத்தனை நாள் தொடர்பு? ஒருவேளை நான் குமுதாவைக் காதலித்தது அவளுக்குப் பிடிக்கவில்லையா? அதை என்னிடம் நேரில் சொல்லியிருக்கலாமே! நான் என்ன உலகத்தில் இல்லாத தவறு செய்துவிட்டேன்? ஊரார் மெச்ச வாழ்ந்த என் குடும்பத்தின் பரம்பரைப் புகழுக்கு இழுக்கு வந்துவிட்டதே! அடக் கடவுளே!

ஒருவேளை என்னைவிட வீரன் அழகு என்பது கண்ணம்மாவின் எண்ணமா? விகாரமாயிருப்பதற்காக நான் என்ன செய்ய முடியும்? நான் அழகு இல்லாதவன்தான்; ஒத்துக்கொள்ளுகிறேன். எனக்கு உணர்ச்சியில்லை என்று யாராவது கூற முடி

யுமா? கண்ணம்மா! உன்னை நம்பி இருந்தேனே! பெண் பிசாசே! பாம்பின் விஷத்தையும் நம்பலாம்! உன் பசப்பு வார்த்தையை நம்ப முடியாதடி! என்னை உனக்குப் பிடிக்கவில்லையானல் அப்பொழுதே என்னிடம் சொல்லியிருக்கலாமல்லவா? கள்ளி! பாசமுள்ளவள் போல் நாடகம் ஆடினயே, பத்திர காளி! உனக்குத் தெய்வம் நல்வழி காட்டுமா?

**கண்ணம்மா :**

தெய்வம் காட்டிய வழிப்படிதான் நான் நடக்கிறேன். அகல்யை செய்ததைவிட நான் என்ன அதிக அக்கிரமம் செய்துவிட்டேன்? தாரை செய்ததைவிட நான் செய்த தவறு பெரிதா? அப்பேர்ப்பட்ட பார்வதியே பிரம்மாவிடம் ஏமாந்துவிட்டாளே! உலகத்தில் நடக்கும் அத்தனை அக்கிரமங்களும் தெய்வங்கள் காட்டிய வழிகள்தானே!

உலகநாதர் என்னைக் கோபித்துக்கொண்டிருப்பார். என்னைத் துரோகி என்று கூறுவார்; விபச்சாரி என்று சொல்வார். எதுவேண்டுமானுலும் சொல்லிக்கொள்ளட்டுமே! நான்கு வருடங்களாகச் செய்யாத காரியத்தை இப்பொழுது என்ன புதிதாகச் செய்துவிட்டேன்? வீரனுடன் வெளியூருக்குப் புறப்பட்டுவிட்டதை வேண்டுமானல் புதிய காரியம் என்று சொல்லலாம். உலகநாதர் ஒழுங்காக நடந்துகொண்டாரா, நான் நடந்துகொள்ள? நான் ஒருத்தி இருக்கும்பொழுது இவருக்கு ஏன் குமுதாமேல் ஆசையும் மோகமும்?

அவர்களுக்குத் தரகு செய்ய நான ஆள்? வீட்டிலேயே இருந்துகொண்டு உலகநாதருக்கு மனைவியாக நடித்துக்கொண்டு வீரன் விருந்தில் நாளைக் கடத்த நான் எண்ணியதுண்டு. அதைக் கெடுத்தவர் என் கணவர்தானே! கணவன் என்ற பொம்மையாகவாவது அவர் இருந்திருக்கலாம்; குமுதாவைக் கோரியதால் அந்தப் பதவியையும் இழந்துவிட்டார், பாவம்! எனக்கு உலகநாதர் மேல் இரக்கம் எப்படிப் பிறக்கும்? பெண்ணினத்தைச் சேர்ந்த குமுதாவை நான் அந்தப் பாடு படுத்தாவிட்டால் வீரனின் விருந்து கிடைக்குமா? குமுதா இறந்த காரணம் உங்களுக்குத் தெரியுமா?

அன்றிரவு அவள் கற்பழிக்கப்பட்டாள். உலகநாதரின் வெறியின் முன் அவள் ஒரு பெட்டிப் பாம்பானள். குமுதாவையும் வீரனையும் பிரிக்க நான் செய்த சூழ்ச்சியில் வெற்றி பெற்றேன். உலகநாதரும் குமுதாவும் ஒரே அறையில் இருந்ததை வீரன் பார்த்தான்; பார்க்கும்படி நான் செய்தேன். மறுநாள் காலையில் குமுதாவுக்குப் பேதி கண்டது. காலரா என்று எல்லோரும் சொன்னர்கள். அவள் அவமானந் தாங்கமாட்டாது வைரத்தைத் தின்றுவிட்டாள் என்பது எனக்கும் அவளுக்குமே தெரியும். எனக்கு

எப்படித் தெரியும் என்று கேட்பீர்கள். என் வைர மூக்குத்தி தூளாக்கப்பட்டுக் கிடந்தது ; அதிலுள்ள வைரத்தைக் காண வில்லை, நான் அந்தச் செய்தியை அப்படியே மறைத்துவிட்டேன்.

குமுதா சாயங்காலம் இறந்துவிட்டாள். அப்பாழுதும் கல்மனங் கரையவில்லை, வீரன் குமுதாமேல் ஆத்திரமாக இருந் தானே தவிரக், கொஞ்சங்கூடக் கவலைப்படவில்லை. அவனைக் கவலைப்பட நான் விடுவேனு?

வண்டிக் கொட்டகையில் ஒரு கடிதம் செருகியிருந்தது. அது வீரனுக்குக் குமுதாவினுல் எழுதப்பட்ட கடிதம் ; அதைக் கடிதம் என்றுகூடச் சொல்ல முடியாது. குமுதாவின் வாழ்க்கைக் குறிப்பை அப்படியே தீட்டியிருந்தாள். பிறந்தது முதல், வைரத் தைச் சாப்பிட்டுச் சாகத் துணிந்தது வரை ஒன்றுவிடாமல் எழுதி யிருந்தாள். அதை நான் எடுத்துப் படித்தேன்; கிழித்தேன். கிழித்து எறிந்ததோடு விடவில்லை. அடுப்பில் போட்டுச் சாம்பலாக்கி விட்டேன். வீரன் கண்ணில் அந்தக் கடிதம் அகப்பட்டிருந்தால், அதிலுள்ள விஷயத்தை அவன் அறிந்திருந்தால்! என்னைச் சித்திர வதை செய்திருப்பான். ஆனுல், இப்பொழுது நான்தான் என் சிரிப்பால் அவனைச் சித்திரவதை செய்கிறேன்.

நானும் வீரனும் இப்பொழுது எங்கிருக்கிருேம் தெரியுமா ? கல்கத்தாவில் நடக்கிறது எங்கள் வாழ்க்கை ! குமுதா இறந்து போன அன்று மாலையில் என் கணவர் கடை சம்பந்தமான வேலை யில் எங்கேயோ போய்விட்டார். குமுதா இறந்து போன கவலை வேறு அவருக்கு. அன்றிரவே நானும் வீரனும் வீட்டை விட்டுப் புறப்பட்டுவிட்டோம். நான் வரும்போது சுமார் பத்தாயிரம் ரூபாய் வரையில் எடுத்துக்கொண்டுதான் புறப்பட்டேன். இரவே எங்கள் கிராமத்துக்கு அருகிலுள்ள ரயிலடிக்கு வந்துவிட்டோம். ரயிலடிக்கு வீரன்தான் வண்டியோட்டி வந்தான். அதோடு அவன் வண்டியோட்டும் தொழிலுக்கு முற்றுப்புள்ளி வைக்கப் பட்டது. என்னுடைய வேதனை வாழ்வும் தொலைந்தது.

அந்த நடு நிசியில் வீரன் வண்டியை வெகு வேகமாகத்தான் ஓட்டிச் சென்றுன். நான் அவனது தோளில் சாய்ந்திருந்தேன். குமுதா இந்தப் பாழும் சமுதாயப் பலிபீடத்தில் தன் உயிரைத் தத்தம் செய்த அதே நாளில் நாங்கள் எங்கள் இன்ப யாத்திரையை நடத்தினேும். எங்களுக்கு என்ன கவலை வந்து கிடக்கிறது!

வண்டி ஊரின் எல்லையைத் தாண்டிக்கொண்டிருந்தது. ஒரே இருள். அந்த இருளில் ஒரு பெரிய ஜோதி நிரந்தரமாக நின்று எரிந்துகொண்டிருந்தது. ''அது என்ன வீரா ?'' என்று கேட் டேன். ''குமுதாவின் பிணம் சுடுகாட்டில் எரிகிறது'' என்று அலட்சியமாக அவன் பதில் சொன்னுன். குமுதாவிடத்தில் அவ

னுக்கு அல்வளவு அன்பு இருந்தது! நான்தான் அவனுக்கு மோட்ச சாம்ராஜ்யமாகிவிட்டேன்! பாவம்!

அத்தானுக்காகச் சுமந்துகொண்டிருந்த உடல் அழுக்குப் பட்டுவிட்டது, அதைத் தீயில் குளிப்பாட்டிக்கொண்டிருந்தாள் குமுதா. குமுதா உலகத்திலிருந்து மட்டுமல்ல, அவள் நம்பியிருந்த அத்தானின் இதயத்திலிருந்தும் பிரிந்துவிட்டாள். பரிதாபத்திற்குரிய சிறுமி!

எங்கள் வண்டி 'கடகட'வென ரயில் நிலையத்தை நோக்கி ஓடிற்று; குமுதா எரிந்துகொண்டிருந்த இடத்தை விட்டு வெகு தூரம் போய்விட்டது.

ஒரு நரியின் பயங்கரமான ஊளை, சோகத்தின் உச்ச ஸ்தாயியை எட்டிற்று. இந்த உலகத்தில் குமுதாவுக்காக அந்த ஒரு ஜீவன் தான் அப்பொழுது அழுதது போலும்!

குமுதா கிடக்கிறுள்; இனி எங்களைப் பற்றிக் கேளுங்கள். நாங்கள் ஏறிய ரயில் கல்கத்தாவை நோக்கிக் கிளம்பிற்று.

எங்கள் கல்கத்தா வாழ்வைப்பற்றி ஒரு வார்த்தை! பக்தர்கள், சுத்த மூடர்கள்; இந்திர லோகத்தைக் காண எங்கேயோ போகவேண்டுமென்கிறுர்களே, அசடுகள்! வந்து பார்க்கட்டும், கல்கத்தாவிலே எங்கள் வீடு இந்திர லோகமாயிருப்பதை! நான் இந்திராணி! வீரன் இந்திரன்! ரதியும் மன்மதனும் பாடங் கற்றுக்கொள்ள எங்களிடம் வரவேண்டும், தெரியுமா?



# நடுத்தெரு நாராயணி

"விடிந்தால் தீபாவளி-இரவு முழுதும் ஊரெங்கும் வாண வேடிக்கைகள். தெருவுக்குத் தெரு-வீட்டுக்கு வீடு-போட்டி போட்டுக்கொண்டு வாணம் கொளுத்தி மகிழ்ந்தனர். சந்தர்ப்பவாதிகளின் பச்சோந்தி உள்ளம் போல மத்தாப்புகள் பல நிறம் காட்டின. ஒரு சில அரசியல் தலைவர்களின் போராட்ட அறிவிப்புகள்போல அவுட் வாணங்கள் ஆகாயத்தில் கிளம்பின. ஆனாவுக்கு ஆனா - கானாவுக்குக் கானா என்ற விதத்திலே எழுதப்படும் அர்த்தமற்ற அடுக்குச்சொல் வசனம்போலச் சீனவெடிகள்-ஊசிப் பட்டாசுகள்-தங்கள் திறமையைக் காட்டிக் கொண்டன. புதிய ஆடைகளைக் கண்டு பூரிப்புத் தவழ ஓடிஆடினர் சிறுவர், சிறுமியர். தலைத் தீபாவளிக்கு வந்திருக்கும் தம்பதிகள், உபசாரங்களுக்கும் கிண்டல் உபத்திரவங்களுக்குமிடையே உல்லாசப் பொழுது போக்கினர். ஊரே மகிழ்ச்சியில் ஆழ்ந்திருக்கும் அந்த இரவில், நாராயணி மட்டும் சோகத்தின் நிழலாகத் தன் வீட்டில் அமர்ந்திருந்தாள். 'தீபாவளி தமிழரின் திருநாளல்ல ; தமிழரின் இறந்த நாளைக் கொண்டாடும் ஆரியப் பண்டிகை. கருத்துக்கு ஒவ்வாத கதை அளப்பு. அதை நமது பண்டிகையாகக் கொண்டாடிக் குதூகலிப்பது குருட்டுக் கொள்கை. ஆகவே, அதில் கலந்து கொள்ளக் கூடாது' என்பதல்ல நாராயணியின் எண்ணம் ! அவள் அவ்வளவு அறிவு வளர்ச்சி பெற்றவளுமல்ல. போட்டி போட்டுக் கொண்டு புராணக் குட்டையிலே மூழ்கி எழும் பெண்மணிகளின் வரிசையிலே அவளும் ஒருத்திதான். ஆயினும், அவள் தீபாவளி கொண்டாடவில்லை.

காதைத் தொட முயலும் கண்களும், காண்பவரைக் கவரும் விதத்தில் அமைந்த உடற்கட்டும் பெற்ற நாராயணி தன் வீட்டு முகப்பிலே அமர்ந்து, தீபாவளி விழாவில் கலந்து மகிழும் ஊராரைப் பார்த்துப் பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தாள்.

வீதியிலே கிருஷ்ணன் - சத்தியபாமா விக்ரகம் அலங்கரிக்கப் பட்ட அழகான ரதம் பவனி வந்துகொண்டிருந்தது. 'வீரன்' கிருஷ்ணன் நரகாசூரனிடம் தோற்று மயங்கும் வேளையிலே, தனது கணைகளைக் கொண்டு அசுரனை அழித்தாள் பாமா என்பதுதானே புராணம். சங்கு சக்ராயுதபாணியான விஷ்ணுவின் அம்சம் பரமாத் மாவே வீழ்ந்துவிட்டபோது-அவரின் தேவி, அசுரசிங்கத்தின் உயிரை அணைத்துவிட்டாள் என்ருல் ஆச்சரியமாகத்தானிருக்கும். எக்கணை வீசினுளோ ; என்ன வக்கணை பேசினுளோ ; எப்படியோ தேவியின் தியாகத்தால் தேவர்களின் எதிரி ஒழிந்தான் என்று திருப்தி கொண்டனர் பக்தர்.

அந்தப் பக்த கோடிகள் பரந்தாமன் பெற்ற வெற்றியைக் கொண்டாடி, அவனையும் அவன் பிராட்டி பாமாவையும் ரதத் திலே வைத்துத் தெரு சுற்றினர். வெற்றியின் சூட்சமம் தெரி யாத விளையாட்டுப் பிள்ளைகளும், பரமாத்மாவுக்கு 'ஜே' போட்ட னர். ஊர்ப்பிரமுகர்கள் ஊர்வலத்தில் கலந்துகொண்டனர். நாயன வித்துவான்கள் தங்கள் திறமையைப் பொழிந்தனர். வீடெங்குமுள்ள பெண்டிரெல்லாம் ஆயர்பாடிக் கண்ணனுக்கு ஆரத்தி எடுத்து ஆனந்தப் பட்டனர். ஆடினர் பாடினர்.

ஆனல் நாராயணியோ ஆடவுமில்லை ; ஆரத்தி எடுக்கவு மில்லை ; நடக்கும் வைபவங்களைப் பார்த்துக்கொண்டே உட்கார்ந் திருந்தாள். பரமாத்மாவின் ஊர்வலம் அவள் வீட்டைத் தாண்டிப் போயிற்று. அந்த வீட்டிலிருந்து யாராவது வந்து பகவானுக்குக் காணிக்கை செலுத்துவார்கள் என்று பக்தர்கள் எதிர்பார்த்தனர். யாரும் வரவில்லை.

ரதம் போகும் திக்கைச் சிறிது நேரம் பார்த்துக்கொண்டே யிருந்தாள் நாராயணி. ரதத்திலே நரகாசுர் வதமே சித்திரிக்கப் பட்டிருந்தது. அந்தக் காட்சியை அவள் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தாள். மலையெனத் தோள் படைத்த நரகாசுரனின் மார்பிலே ஒரு வேல் பாய்ந்திருக்கிறது. குகை யெனத் திறந்த வாயோடு நிற்கிருன் அவன். அவனெதிரே கிருஷ்ணன் - மயங்கிய நிலையில் ! பாமா - வேல்பாய்ச்சும் சாய லில் ! இதுவே ரதத்தில் சித்திரிக்கப்பட்டிருந்த தீபாவளிக் காட்சி. அறிவுக்கு அணைகட்டி, இன உணர்ச்சியைத் தடுக்கப் பெரும் சுவரும் எழுப்பி வைக்கும் அந்தப் பண்டிகையில் தம்மை மறந்து பங் கெடுத்துக்கொண்டு, பரவசமுற்றனர் அந்த ஊரார். நாராயணி யின் கண்களைவிட்டு ரதம் மறைந்தது. வாணச் சத்தம் அவள்

காதைத் துளைத்துக்கொண்டுதானிருந்தது. ரதத்திலே அவள் கண்ட நரகாசுர வதக்காட்சி, அவள் நெஞ்சை விட்டு அகலவில்லை. நினைவுகள் அலை மோதின.

நடுத்தெருவிலேதான் நாராயணியின் வீடு. நடுத்தெருவிலே வீடுகட்ட நகரச்சபையார் எப்படி அனுமதித்தார்கள் ; நகரசபை யாருக்கு நாராயணியின் மீது அவ்வளவு அனுதாபம் விழக் காரணம் என்ன என்றெல்லாம் யாரும் சந்தேகப்படத் தேவையில்லை. அவள் வீடு இருந்த தெருவுக்குப் பெயரே நடுத்தெரு.

நாராயணி நடுத்தெருவிலே, நடுத்தரமான குடும்பத்திலே நாலுபேர் அண்ணன் தம்பிகளுக்கிடையே பிறந்தவள். ஐந்து மக்களையும் விட்டுவிட்டுப் பெற்ருேர் விடைபெற்றுக் கொண்டனர். மாயூரம் காவேரியாற்றிலே துலாமுழுக்கு ஆடுவதற்காகச் சென்ற சகோதரர்கள் நால்வரும், திரும்பி வராமலே போய்விட்டனர். இளைய தம்பி, ஆற்றுச் சுழலிலே சிக்கிக்கொள்ள, அவனை விடுவிக்க ஒருவர் பின் ஒருவராக மூவரும் குதித்து, அனைவரும் நேரே ''மோட்சலோகம்'' போய்விட்டனர் என்ற செய்தி மட்டுமே நாராயணிக்குக் கிடைத்தது.

இந்தச் சோகச்சுமை அவள் தலையிலே விழும்பொழுது அவள் பருவக்கொடி ! சிற்பியின் கைத்திறனே உயிர் பெற்றது போன்ற சிந்தை கவர் உருவம் ! புருவம் - பருவம் - எல்லாமே, ஆண்களின் கருவமடக்கும் விதத்திலே அமைந்திருந்தன. அழகுச்சிலை ! அற்புதப் பதுமை ! தேன் மலர் ! திராட்சைக் கொடி ! ஆனல் அந்த வாசரோஜாவேலியின்றிப்-பாதுகாக்க யாருமின்றித்-தன்னந் தனியே வாடிக்கொண்டிருந்தது. ''தந்தை தாய் அண்ணன் தம்பி எல்லாரையும் விழுங்கிவிட்டு, இந்தப் பாவிக்கு மட்டும் பாழும் உயிரை ஏன் வைத்திருக்கிருய்?'' என்று அவள் பகவான் சந்நிதானத்திலே பலமுறை அழுதிருக்கிருள்.

அப்படி அழுவதற்காக அவள் ஆலயத்திற்குச் செல்லும்போது தான் குருக்கள் கிருஷ்ணய்யரின் சந்திப்பு ஏற்பட்டது. கோயில் குருக்கள் என்ற போதிலும் மிடுக்கான நடையுடை பாவனைகள் உடையவர். கழுத்திலே அழகான தங்கச் சங்கிலி; அந்தச் சங்கிலியின் முனையிலே ருத்ராட்சக்காய்; இடுப்பிலே மயில் கண் வேட்டி; மேலே ஒரு வெண் பட்டுத்துண்டு; பி. ஏ. குடுமியுடன் கூடிய அமெரிக்கன் கிராப்பு - இவைதான் கோயில் குருக்கள் கிருஷ்ணய்யரின் அடையாளங்கள் ! மறந்துவிட்டேன் ; மன்னிக்கவும் ; அன்றுட்டம் சலவை செய்யப்படும் பூணூல் உண்டு மார்பிலே ! விபூதிப் பூச்சு உண்டு ; விஷ்ணுவுக்கு விசேஷமான நாட்களிலே நாமமும் போடுவார் ! பட்டையாக அல்ல ; பக்குவமாக ; சிறிய கோடாக; சிங்காரம் கெடாமல் !

வயதோ முப்பதுக்குமேல் இல்லை. இந்த ஒரு முதல் போதாதா- காதல் வியாபாரத்தை ஆரம்பிக்க?

ஐம்பது அறுபது ஆனதுகளே, நரை மயிர் கருக்கும் தைலம் தடவிக்கொண்டு, பொய்ப்பல்லால் புன்னகை புரிந்து, நஷ்டம் வந்தாலும் பரவாயில்லையென்று காதல் வாணிபம் நடாத்தக் கன்னியரைத் தேடியலையும்போது; முப்பதே வயதான கிருஷ்ணய்யர் மட்டும் சும்மா இருப்பாரா ? அதுவும் புரு வலுவிலே பறந்து வருகிறது, வட்டமிட்டுப் போகிறது என்றால், கேட்கவும் வேண்டுமா ?

நாள்தோறும் நாராயணி ஆண்டவன் சந்நிதியிலே கண்ணீர்த் துளிகளைச் சிந்தினாள். கிருஷ்ணய்யர், விபூதிப் பிரசாதம் அளித்து வந்தார். இந்த விஷயம் பல நாட்கள் மௌனமாகத்தான் நடந்து வந்தது. மாலை எப்போது வரும் ; அப்போது அந்த மயிலும் வருமே என்று பாதை மீது பார்வையை விரிக்க ஆரம்பித்தார் கிருஷ்ணய்யர். நாராயணி கடவுளின் முன்னே தினம் தினம் அழவேண்டிய காரணம் என்ன ? குருக்களின் இதயத்தைக் குடைந்தது இந்தக் கேள்வி. அவளையே கேட்டுவிடத் தீர்மானித்தார். ஆனால் அவள் வரும் நேரத்திலேதான் அந்தப் பாழும் பக்தகோடிகளும் ஆலயத்திற்கு வருவது வழக்கமாக இருந்தது. தனிமையில் அவளிடம் பேச அவருக்கு வாய்ப்பில்லாமலே போய் விட்டது.

ஒருநாள் - சோமவாரம் - கோயிலில் அபிஷேக ஆராதனைகள் அமர்க்களப்பட்டன. நல்லகூட்டம். கச்சேரிகள் வேறு. அந்த ஊர்ப் பெரிய மனிதர் ஒருவர் காங்கிரசிலே சேர்ந்துவிட்டதற்காக நடத்தப்பட்ட திருவிழா அது. கோயிலுக்கு எதிரேயுள்ள காளி மண்டபத்தில் ஆடு வெட்டிப் பலி கொடுத்துக் கள்ளுக் குடங்களும் வைத்துப் படைத்துக் காந்தியாரின் கொள்கைக்குப் பெருமை கொடுத்தார்கள். அதையொட்டிப் பெரிய கோயிலிலும் உயர்ந்த முறையிலே உபயம் நடத்தினார்கள்.

அன்றையதினம் வழக்கம்போல் நாராயணி வந்தாள். காத்திருந்த அய்யரும் பூத்திருந்த மல்லிகை வந்துவிட்டதென மகிழ்ந்தார். பரதம் நடக்குமிடத்திலும், பாட்டுக் கச்சேரி நடக்குமிடத்திலும் பக்தர்கள் தங்கள் கவனத்தைத் திருப்பியிருந்தனர். நாராயணியோ கர்ப்பக் கிரகத்திற்குள்ளே நுழைந்தாள். தாமரை மொட்டுப்போல் கரங்குவித்தாள். காமனை வெல்லும் விழி மூடினாள். இமை அணையைப் பிளந்துகொண்டு கண்ணீர் வெள்ளம் புறப்பட்டுக் கன்னத்தின் மேட்டிலே கிளைகளாகப் பிரிந்தது. ஆழ்ந்த பக்தியிலே மெய்ம் மறந்து நின்றாள். ''எனக்கு வழி காட்டு அப்பனே ! என்னை மட்டும் உலகத்திலே ஜீவித்திருக்க ஏன்

விட்டாய் ? பெரிய குடும்பத்திலே தனி மரமாய் நின்று தவிக்கி றேனே; இது உனக்கு நியாயந்தானா?'' என்று கதறினாள்.

பிரார்த்தனை முடிந்தது. பிரசாதம் தர அய்யர் வந்தார். விபூதியை வாங்கி நெற்றியிலே இட்டுக்கொண்டாள். திரும்பினாள்.

காய்ந்துபோன தொண்டையைக் கனைத்துக்கொண்டு, அய்யர் ஏதோ பேச வாயெடுத்தார். நாக்கு எழவில்லை. கஷ்டப்பட்டுப் பேசியே விட்டார். நடுக்கத்தோடு ! ''ஏனம்மா தினந்தோறும் இப்படிக் கண்ணிலே ஜலம் விடறே ?''

இதைக் கேட்டதும் நாராயணிக்குத் தூக்கி வாரிப் போட்டது. தானோ, ஒரு பருவ மங்கை. வீட்டைவிட்டு வெளியே கிளம்பு வதே தப்பு ; கோயிலுக்கு வருவதால் யாரும் குறை சொல்ல மாட்டார்கள். ஆனால், அங்கே ஒரு ஆடவரோடு பேசுவது என்பது ஒத்துக்கொள்ளக்கூடிய விஷயமா ? இவ்வளவையும் அவள் நினைத்துப் பார்த்து, பதில் சொல்வதா இல்லையா என்ற தீர்மா னத்துக்கு வர நேரமில்லை. அவளும் நடுங்கியவாறே, ''எல்லாம் என் விதி !'' என்று பதில் கூறினாள்.

''நாராயணி ! நோக்கு என்ன கஷ்டம்னு நேக்கு நன்னாகத் தெரியும் ; பெத்தவாள், பிறந்தவாள் எல்லாம் போயிட்டா ! ஒண்டிக்கட்டையா இருந்து தவிச்சிண்டிருக்கே !'' என்று பீடிகை போட ஆரம்பித்தார் குருக்கள்.

நாராயணிக்கு அழுகை அதிகமாயிற்று. ''நான் வருகிறேன்!'' என்று கூறிவிட்டுக் கர்ப்பக் கிரகத்தை விட்டு வெளியேறினாள் அவள்..

ஆண்டவன் தரிசனம் முடிந்ததும், கோயில் பிரகாரத்தைச் சுற்றிவிட்டுப் போவது நாராயணியின் பழக்கம். அவ்வாறே, அன்றும் அவள் பிரகாரத்தைச் சுற்றி வந்து கொண்டிருந்தாள். பிரகாரத்திலே, அப்பிரதக்ஷணமாகச் சுற்றி வந்துகொண்டிருந்த கிருஷ்ணய்யரை அவள் எதிரே கண்டாள். நாணத்தால் தலை யைக் குனிந்தவாறு அவரைக் கடந்து செல்ல முயன்றாள். கிருஷ் ணய்யர் சுற்று முற்றும் பார்த்தார். பிரகாரத்தின் பக்கம் யாருமே வரவில்லை. எல்லோருமே கச்சேரி மண்டபங்களில் நிறைந்திருந்தனர். ''நாராயணி, நில் !'' என்றார் மெதுவாக ! நாராயணிக்குக் கால் பெயரவில்லை. நின்று தீரவேண்டியிருந்தது. கிருஷ்ணய்யர் அவள் எதிரே ஓடினார். அவள் கால்களிலே தலை முட்டுமளவுக்குச் சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு வீழ்ந்தார்.

நாராயணிக்கு ஒன்றுமே புரியவில்லை. ''சுவாமி! சுவாமி!!'' என்று கத்திவிட்டாள்.

''நாராயணி ! அடியேனை என்று ரட்சிப்பாய் ! தேவி விக்ர கத்தின் முன்னேகூட அடியேன் இப்படி நமஸ்கரித்தது கிடையாது.

நீதான் எனக்குத் தேவி! என்னை ஏற்றுக்கொள்!'' என்று மன்றாடி நின்றார்.



''சுவாமி ! தாங்கள் தேவ குலம். நானோ....'' என்று இழுத்தாள் அவள்.

''முற்றும் துறந்த பெரியவாளுக்கு எல்லாக்குலமும் ஒரே குலந்தான் ! நான் ஆண்குலம் - நீ பெண்



குலம். வா, இருவரும் காதல் குளத்திலே நீந்துவோம்,'' என்று கையைப் பிடித்தார் அய்யர்.

''அய்யோ சாமி ! ஆண்டவன் கோயில்....'' என்று எச்சரித்தாள் நாராயணி!

''அருகில் ஒன்றும், தலையில் ஒன்றும் வைத்திருப்பவர்தானே ஆண்டவன் - இது தெரியாதோ நோக்கு !'' என்று அவள் ஜடையைப் பிடித்து விளையாடினார் குருக்கள்.

''அய்யோ, இதெல்லாம் கூடாது - எனக்குப் பிடிக்காது!'' என்று சொல்லிவிட்டுத், தட்டிக் கழித்துவிட எண்ணி வாயைத் திறந்தவள் - ஏனோ தெரியவில்லை ''யாராவது பார்த்து விடுவார்கள் !'' என்று நாணிக் கோணி நகர்ந்தாள். இந்த வார்த்தை போதாதா அய்யருக்கு !

''எல்லாப் பசங்களும் பரத நாட்டியம் பார்த்துண்டு இருக்கான். ஒருத்தனும் வரமாட்டான் ; பயப்படாதே'' என்று சொல்லி அய்யர் அவளை எட்டிப் பிடித்தார். அவள் கன்னம் சிவந்தது. அவரது கையிலே தன்னை ஒப்படைத்தாள். திடீரென்று நாராயணிக்கு ஞானோதயம் ஆயிற்று. அய்யரின் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, ''சுவாமி, என்னைக் காப்பாற்றுங்கள் ! நீங்கள்தான் எனக்குத் துணை !'' என்று 'ஓ'வென அலறினாள்.

அய்யர் அவளை வாரியெடுத்துத் தாவியணைத்துத் தைரியம் கூறி வீட்டுக்கு அனுப்பிவைத்தார். அவளும், ஆண்டவன் அருள் பாலித்துவிட்டான் என்ற நம்பிக்கையோடு வீட்டுக்குப் புறப்பட்டாள். அய்யரும் அந்தத் தையலின் கன்னத்தைச் சுவைத்த உதடுகளைக் கழுவாமலே ஆண்டவனுக்கு அர்ச்சனை ம ந் தி ர ம் ஜெபிக்கக் கர்ப்பக்கிரகம் நோக்கி விரைந்தார்.

கோயில் பிரகாரத்திலே வாக்களித்த பிரகாரம், அய்யர் நாராயணியை எப்போதும் வைத்துக் காப்பாற்றுகிற அளவுக்கு அவள் வீட்டிற்கே வந்து சேர்ந்தார்.

''கோயில் குருக்களுக்கு அடிச்சுதடா சான்ஸ் ! கொய்யாப் பழமாக இருந்தாள் - அவளைக் கொய்துவிட்டார் அய்யர். என்ன இருந்தாலும் அனுபவிக்கப் பிறந்த ஜாதியப்பா அது! எத்தனையோ பேர் நத்திக்கிடந்தார்கள் ; எல்லோரையும் எட்டி உதைத்துவிட்டுப் பூணூல் வலையில் மாட்டிக்கொண்டது அந்தப் புள்ளிமான் ! போகிறான் போ ! அவனாவது சுவைக்கட்டும் !'' -- இளங்காளைகளிடத்திலே இப்படிப் பொறாமை வடிவத்திலே ஆரம்பமான பேச்சு, விட்டுக் கொடுக்கும் தன்மையிலே முடிவு பெற்றது.

கடவுளின் பக்கத்திலேயிருந்து கடமைகளைச் செய்கிற மனிதர் மிகவும் நல்லவராக இருப்பார் ; நம்பியவரைக் கைவிடமாட்டார்; அதிலும் பிராமணர் ; புரண்டு பேசமாட்டார் ; பொய் கூறுவது பாபமெனக் கருதுவார்; பரமசிவன் பக்கத்திலே பார்வதிபோலத் தன்னையும் அருகே வைத்து ரட்சிப்பார் என்ற நம்பிக்கையிலே தான், நாராயணி, கோயில் குருக்களைத் தன் கணவனாக ஏற்றுக் கொள்ள முடிவு செய்தாள். கோயில் பிரகாரத்திலே கர்ப்பக்

கிரகத்தின் நிழல் பட்டு இருண்டிருந்த இடத்திலே இதழ்களைப் பரிமாறிக்கொண்டு—திரும்பி இல்லம் வந்த பிறகு, அன்றிரவு முழுவதும் தூங்காமல் அவள் யோசித்ததன் முடிவு குருக்களைத் தன் மணாளனாக ஆக்கிக்கொள்வது என்பதுதான்.

''ஏண்டி நாரா, கவலைப்படுறே! நான் பிராமணன் - நீ சூத்திரச்சின்னுதானே பார்க்கிறே! பிராமணனுக்குத் தலைவர் இருக்காரே; எங்க இராஜாஜி அவர் மகளை காந்தி மகனுக்குக் கொடுக்கலியோ - ஜாதி ஆசாரம் பேசினாளோ ; என்ன ஆச்சு அது? அம்பேத்கார்னு ஒரு பறையன் - ஆதித் திராவிடர்னு சொல்லிக்குவா - அவரைக் கல்யாணம் பண்ணிண்டு இருக்கிறது யார் தெரியுமா ? எங்க ஜாதிக்காரி ஒருத்திதான் ! ஜாதி ஆச்சாரம் எங்கேடி போச்சு ? ருக்மணி அருண்டேல் சமாச்சாரம் தெரியுமோ நோக்கு! அடி அசடு - பித்துக்கொள்ளி ! சொல்றதைக் கேளுடி ! பயப் படாதே ! நான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்கப்போறேன்'' - என்று கிருஷ்ணய்யர் பிரசங்கம் ஒன்றே செய்தார்.

''ஜாதியாரெல்லாம் கல்யாணத்துக்கு வருவார்களா ?'' என்று கேட்டு வைத்தாள் நாராயணி

''வரவேண்டாமே-நான் ஜாதியாருக்குச் சொல்லப்போறதே இல்லை. நீ என்னோடே சாயரக்ஷை கோயிலுக்கு வரவேண்டியது ; இதோ வாங்கி வச்சிருக்கேன் மாங்கல்யம்! ஆண்டவனுக்கு நேரா இதை உன் கழுத்திலே கட்டுவேன். நமக்கு மனுஷாள் சாக்ஷி வேண்டாம் ! தேவாள் சாக்ஷி போதும் - ஆண்டவாள் சாக்ஷி போதும் ! என்ன சொல்றே ?'' என்று குழைவோடு கேட்டார் குருக்கள்.

மகேசன் சந்நிதானத்திலேயே தனக்குத் தாலி கட்டப் போகிறார் குருக்கள் என்ற செய்தி கேட்டு, நாராயணி குதூகலமடைந்தாள். அவள் கழுத்திலே தாலி மின்னியது. ஊரிலே பேசிக்கொண்டார்கள் கிருஷ்ணய்யர் நாராயணியை வைப்பாக வைத்திருக்கிறார் என்று ! அப்படியே பேசியவர்களிடம் அவரும் 'ஆமாம்' போட்டார். இப்படி ஊரார் பேசுவது நாராயணி காதிலேயும் விழுந்தது. அவள் அவரிடம் முறையிட்டாள். ''என்னை உங்கள் 'வைப்பு' என்று சொல்கிறார்கள்'' என்று !

''அட பித்து ! 'வைப்பு' என்றால் ஏன் கோபப்படணும்! 'ஒய்ப்' என்ற இங்கிலீஷ் வார்த்தையைச் சொல்லத் தெரியாமல் அவா 'வைப்' என்று சொல்றா ! அவ்வளவுதான் !'' என்று ஒரு போடு போட்டார் கிருஷ்ணய்யர்.

கணவனே தெய்வம் என்று கருதிக்கிடக்கும் நாராயணியும் அந்தப் பேச்சையெல்லாம் அதிகமாக வளர்த்தாமல் அவரோடு சுமுகமாகவே பழகி வந்தாள்.

திடீரென்று ஒரு நாள், வீட்டுக்கு வந்த அய்யரின் முகத்திலே சோகம் படர்ந்திருப்பதை நாராயணி கண்டாள். காரணம் கேட்டாள். கோயில் வேலையிலிருந்து தர்மகர்த்தா நரசிம்ம நாயுடு தன்னை விலக்கிவிட்டார் என்று கூறினார் அய்யர்.

''ஏன் ?'' என்று துடித்தாள் நாராயணி.

''ஊரிலேயுள்ள பிராமணர்கள் எல்லாம் மாநாடு கூடினார்களாம். அதிலே நான் கலப்புத் திருமணம் செய்துகொண்டு உன்னோடு வாழ்வதைக் கண்டித்தார்களாம். சூத்திரச்சியோடு வாழுகிறவன் கோயிலிலே சாமியைத் தொட்டுப் பூஜை செய்யக் கூடாது என்று தர்மகர்த்தாவிடம் வலியுறுத்தினார்களாம். அதனால் தர்மகர்த்தா என்னை விலக்கிவிட்டார்'' என்றார் அய்யர்.

இப்படி ஒரு புரட்சிகரமான செய்தியைக் கேள்விப்பட்ட நாராயணி, கிருஷ்ணய்யரைக் கட்டிப் பிடித்தபடி, ''பிராமணோத்தமரே ! இந்த அனாதைக்காக உங்கள் ஆச்சார அனுஷ்டானங்களையெல்லாம் எதிர்த்து நின்றதோடு இல்லாமல், சமூகத்தையும் துச்சமாக மதித்துக் கோயில் வேலையையும் தியாகம் செய்துவிட்டீர்களே '' என்று கதறினாள்.

''நாராயணி ! சிறு பிள்ளை மாதிரி அழுதுண்டு இருக்காதே ! உனக்காக நான் எவ்வளவோ செய்திருக்கேன். அதுமாதிரி நீ எனக்காக எதுவும் செய்யத் தயாராயிருக்கணும். அதுதான் எனக்குத் தேவை !'' என்று சொல்லியபடி அவள் கூந்தலைக் கோதினார் அய்யர்.

''சுவாமி ! தங்களுக்காக உடல் - பொருள் - ஆவி மூன்றையும் தத்தம் செய்யத் தயாராயிருக்கிறேன்'' என்று அவரது மடியிலே சாய்ந்து விக்கி விக்கி அழுதாள் அந்த விழியழகி !

'கிருஷ்ணய்யர் - நாராயணி' ஜோடியைப் பார்க்கும்போது ; அய்யோ, இந்த யுவதிக்கு இந்த மனிதன் அவ்வளவு பொருத்தமில்லையே' என்று சொல்லத்தான் தோன்றும். 'கிளி மாதிரி இருக்கிறாள் - இவனோ எலிமாதிரி இருக்கிறான்' - என்று விமர்சித்தவர்களும் உண்டு. 'பேரழகின் பிறப்பிடம் அவள் - இந்தப் பிராமணனோ அவளெதிரே விண்மீனுக்குமுன் மின்மினியாகத் தெரிகிறான்' - இப்படிப் பேசாதாரும் இல்லை. ஆனால், நாராயணியின் கண்களோ, இவைகளுக்கெல்லாம் விதிவிலக்கு. அவள் மனக் கண்களுக்கு முன்னே எல்லோருடைய விமர்சனமும் தவிடு பொடியாகி விட்டது.

குலப் பெருமை இழந்தார் - கோயில் குருக்கள் என்ற மதிப்பை இழந்தார் - இவ்வளவும் தனக்காக ! தன்னிடம் தந்த வாக்கை நிறைவேற்றுவதற்காக - என நினைக்கும்போது, நாராயணிக்கு நேரே கிருஷ்ணய்யரின் உருவம் - கிருஷ்ண பகவானின் உருவம்போலவே தோற்றமளித்தது. ''கண்ணா, மணி வண்ணா!''

என்று அவள் பாடாததுதான் பாக்கி. அவ்வளவு பக்தியும் பாசமும் புருஷன்மீது ஏற்பட்டுவிட்டது அவளுக்கு.

குஷ்டரோகிக் கணவனைத் தாசியின் வீட்டுக்குத் தூக்கிச் சென்ற நளாயினி - 'தேவலோகத்து மாதர்கள் கற்பரசிகளாய் இல்லாத போது, பூலோகத்தில் மட்டும் கற்பரசிகள் இருக்கலாமா ? அவர்களைச் சோதிப்போம்'எனத் தோள் தட்டிப் புறப்பட்டு, நிர்வாணமாக வந்து சோறு பரிமாறச் சொன்ன மும்மூர்த்திகளைக் குழந்தைகளாக மாற்றி நிர்வாணக் கோலத்தோடு அன்னமிட்ட அனுசூயா- இத்தகைய பத்தினிகளையெல்லாம் தோற்கடிக்கும் அளவுக்குப் பதி சொல் தட்டாத பாவையாக நடந்துகொள்ள வேண்டுமென்று நாராயணி ஆசைப்பட்டாள்.

கோயில் வேலையிலிருந்து நீக்கப்பட்ட இரண்டு நாட்களுக்குப் பிறகு, ஒருநாள் இரவு கிருஷ்ணய்யர் அவசர அவசரமாக வீட்டுக்கு ஓடிவந்தார். அவரது உடலெங்கும் வியர்வைத் துளிகள். மேல் மூச்சுக் கீழ் மூச்சு வாங்கியபடி, ''நாராயணி ! நாராயணி!'' என்று அலறினார்.

அவளோ ''என்ன ? என்ன ?'' என்றுகேட்டபடி சின்ன இடை நெளிய ஓடிவந்தாள் பள்ளியறையிலிருந்து !

அய்யர் பிரக்ஞையற்ற நிலையில் நின்றுகொண்டு பிதற்றினார்.

''நாராயணி ! நோக்காக நான் எவ்வளவு தியாகம் செய்திருக்கேன் ?''

''ஆமாம் ; அதற்கென்ன இப்போது ?''

''ஞாபகமிருக்கா ? நேக்காக நீ உடல் - பொருள் - ஆவி மூன்றையும் தியாகம் செய்வேன்னு சொன்னியே !''

''ஆமாம் சொன்னேன் - இப்போதும் சொல்கிறேன் !''

''நாராயணி ஆபத்து வந்து விட்டதடி ! நீ, ஆவியையும் பொருளையும் தியாகம் செய்யத் தேவையில்லை. உடலை மட்டும் தியாகம் செய் போதும் !''

''என்ன சொல்கிறீர்கள் சுவாமி ?''

''ஆமாண்டி கண்ணே ! என் உயிரைக் காப்பாற்ற வேணும்னு, நீ உன் உடலைத் தியாகம் செய்யத்தான் வேணும் !''

''புரியவில்லையே !......''

''தர்மகர்த்தா நரசிம்ம நாயுடு இருக்காரே ; அவருக்கு உன் உடலை..''

அய்யர் வாய்மூடவில்லை. அதற்குள் நாராயணி மயக்கமுற்றுக் கீழே சாய்ந்தாள்.

நாராயணிக்குப் பிரக்ஞை வந்தபோது, தான் கட்டிலிலே படுக்க வைக்கப்பட்டிருப்பதை உணர்ந்தாள். தன்னுடைய நெற்றியை மெதுவாகத் தடவிக் கொடுத்துக்கொண்டிருந்த கைகளைத் தனது கைகளால் வெறுப்போடு நகர்த்தினாள். அப்படி அவள் நகர்த்தும்

போது, கண்களை அகல விரித்துப் பார்த்தாள். அவளருகே சாய்ந்த படி அமர்ந்திருந்தது கிருஷ்ணய்யர் அல்ல.

கிருஷ்ணய்யரைவிட அழகான ஒரு மனிதர். நல்ல தேகக் கட்டுப் படைத்த வாலிபர். முறுக்கிவிடப்பட்ட இளம் மீசை அவரது முகத்தின் கம்பீரத்தை அதிகப்படுத்திக் காட்டிக்கொண்டிருந்தது. பரந்த மார்பகமும், அதை மூடியிருக்கும் பட்டுச் சொக்காயும், பார்ப்பவரைக் கவரத்தக்க விதத்திலே அமைந்திருந்தன. நெற்றியிலே லேசான நாமம் - சிவப்புக்கோடு மட்டும்! அவர் நாராயணியை உற்றுப்பார்த்தபடி அமர்ந்திருந்தார். அவரைக் கண்ட நாராயணிக்குப் பேச வாயெழவில்லை. எழுந்தோடுவதற்கும் சக்தியற்றுப் போனாள். ஏதோ சொல்ல நினைத்தாள். வாய் குழறிற்று.

''நீங்கள்....? நீங்கள்....?'' என்று மட்டுமே அவளால் கேட்க முடிந்தது. அப்படிக் கேட்டுக்கொண்டேயிருந்தாள்.

''நான்தான் தர்மகர்த்தா நரசிம்ம நாயுடு'' என்று கூறியவாறு நாயுடு அவளை இறுகத் தழுவிக்கொண்டார்.

நாராயணி அவரிடமிருந்து விலகிக்கொண்டு, ''அய்யோ தெய்வமே! இது உனக்கு அடுக்குமா?'' என்று கதறினாள். தெய்வம் அப்போது என்ன வேலையாக எங்கோ போயிருந்ததோ? தன் பிரதிநிதியாகக் 'காமனை' அனுப்பியிருந்தது போலும்! அவனும் நரசிம்ம நாயுடு பக்கம் சேர்ந்துகொண்டு தூபம் போட ஆரம்பித்தான்.

''கண்ணே நாராயணி! என் பேச்சைக் கேளடி; பெண் தெய்வமே!'' என்று நாயுடு அவள் அழகின் முன்னே மண்டியிட்டார். ''என் கணவர்தான் இதுபோன்ற இழி தொழிலுக்கு இசைந்தார் என்றால், கோயில் தர்மகர்த்தாவாகிய தாங்களும் பாவச் செயல் புரியலாமா?'' எனக் கண்ணீர் வடித்தபடி தர்மகர்த்தாவின் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு துடித்தாள் நாராயணி.

''பாபம், புண்ணியம் எல்லாம் எனக்குத் தெரியாது நாராயணி! அதைப் பற்றியெல்லாம் உன்னிடம் உபதேசம் கேட்கத் தேவையில்லை. வாரம் ஒரு முறை எது தவறினாலும், கோயிலிலே வாரியாரின் உபதேசம் தவறுவதில்லை. அதை வரி பிசகாமல் என் காதால் கேட்டுக்கொண்டுதான் வருகிறேன்'' எனச் சிரித்தபடி அவளை வாரியணைத்தார் நாயுடு!

அவரது வாலிபம் துள்ளும் வலிமை மிக்க கரங்களிலே நாராயணியின் மெல்லிய இடை சிக்குண்டு நெளிந்தது; வளைந்தது; துவண்டது!

அந்தப் பலமான அணைப்பிலே சிக்கியபடியே நாராயணி அவரைப் பார்த்துப் பேசினாள். இருவருடைய முகங்களும் ஒன்றுக்

கொன்று வெகு அருகினிலேதானிருந்தன. அவள் ஆத்திரத்தோடு கேட்டாள். ''நீங்கள் செவிமடுக்கும் உபன்யாசங்களிலே இப்படித்தான் இன்னொருத்தன் மனைவியிடம் இன்பப் பிச்சை கேட்கச் சொல்லுகிறார்களோ ?'' என்று !

''ஆமாம் கண்ணே -- ஆமாம்! சாம்பல் பூசிய சிவனைத் தன் மனைவியோடு சரச சல்லாபத்திற்கு அனுப்பிய இயற்பகை நாயனார் பற்றிப் புராண காலக்ஷேபம் இன்று காலையிலேதான் ஆயிரக் கால் மண்டபத்திலே அதிவிமரிசையாக நடைபெற்றது'' எனக் கூறியபடி அவள் முகத்தோடு தன் முகத்தைப் பொருத்த முனைந்தார். அவரிடமிருந்து எப்படியும் விடுபடவேண்டும் என்ற ஆவேச உணர்ச்சியோடு அவரை ஒரே தள்ளாகக் கீழே தள்ளிவிட்டுச் சுவரின் பக்கம் போய் ஒதுங்கி நின்று விம்மியழத் தொடங்கினாள் அவள்.

நாயுடுவுக்குக் கோபம் பிறந்தது. ''நாராயணீ! இதனால் எனக்கொன்றும் நஷ்டமில்லை. நாளைக்கு உன் புருஷன், கையிலே காப்புப் போட்டுக்கொண்டு வீதியிலே போவான். அதைப் பார்க்க வேண்டுமென்ற ஆசையிருந்தால் உன் இஷ்டப்படியே நட !'' என்று கூறிவிட்டு நாயுடு அறையைவிட்டு வெளியேறினார்.

நாராயணி சிலைபோல் நின்றுகொண்டிருந்தாள். கிருஷ்ணய்யர் அவளை நோக்கி வேகமாக ஓடிவந்தார் - ''அடி பாவி ! என்னை மோசம் செய்துவிட்டாயே !'' என்று அவள் கையைப் பிடித்துக்கொண்டு அலறினார். நாராயணிக்கு அவரோடு பேச மனமில்லை. பேசாமல் கட்டிலிலே உட்கார்ந்துகொண்டு கிருஷ்ணய்யரை எரித்துவிடுவதுபோல் பார்த்தாள்.

''ஏண்டி, இப்படி என்னைப் பார்க்கிறே ? என்னை ஜெயிலில் போடறதுக்கு நீயும் தீர்மானிச்சுட்டியா ?''

கிருஷ்ணய்யர் பரிதாபமாகக் கேட்டார். நாராயணி பேசாமலிருக்கவே, மீண்டும் அவரே பேச்சைத் தொடர்ந்தார்.

''அடி என் கண்ணு ! என் நிலைமை நோக்குத் தெரியாதடி ! கைக்கு விலங்கு காத்துண்டு இருக்கடி ! . . . . கோயிலில் அம்மன் தாலியையும், மூலவிக்ரகத்துத் தங்கக் கவசத்தையும் நான் திருடி விட்டேன்னு பேரு கட்டிவிட்டானுங்கடி ! வித்த இடத்திலே, அந்த வாங்கின பயலுகளும் என்னைக் காட்டிக்கொடுத்து விட்டானுங்கடி ! இப்ப என்னடி பண்றது ! தர்மகர்த்தா தயவு இல்லேன்னா தலை தப்பாதடி, தலை தப்பாது.''

நாராயணி அழுதுகொண்டிருந்தாளே தவிரப் பேசவில்லை. அவளது நெஞ்சிலே எத்தனையோ குமுறல்கள்! கொழுந்துவிட்டெரியும் தீ ஜுவாலையைப் போல இருந்தன அவள் கண்கள்.

''எனக்காக இந்தத் தியாகம் பண்ணுடி ! இது ஒண்ணும் பெரிய குற்றமில்லேடி. தர்மகர்த்தா நரசிம்ம நாயுடு நல்ல

மனுஷன் - எனக்குச் சகோதரன் மாதிரி ! அவன் மனசு வச்சாத் தான் என்னைக் காப்பாத்த முடியும். ஒரு குல ஸ்திரீ அஞ்சுபேர் வரை ஆடவாளிடம் தொடர்பு வச்சிக்கலாம்னு நம்ம பாரதமே சொல்லுதடி ! கேளடி என் பிராண நாயகி - பத்து வருஷம் பதினைந்து வருஷம்னு என்னை ஜெயில்லே போட்டுட்டா - அப்ப கவலைப்பட்டுக்கிட்டுதானே இருப்பே ? அந்தக் கவலையில்லாமே இரண்டு பேரும் சந்தோஷமாயிருக்க சம்மதம் கொடடி !''

அய்யர் கெஞ்சினார். நாராயணியின் மௌனம் நீடித்தது. அய்யருக்குச் சிறிது நம்பிக்கை பிறந்தது. நாராயணி தனக்காகத் தன்னைத் தியாகம் செய்யத் தீர்மானித்துவிட்டதாகக் கருதினார்.

''அவர் எங்கும் போய்விடவில்லை. அடுத்த அறையிலேதான் இருக்கிறார் ! இப்போதே வரச் சொல்றேண்டி ; மறுபடியும் அவரை விரட்டாதே !'' என்று கூறியபடி கிருஷ்ணய்யர் வெளியே ஓடினார்.

நாராயணி கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள். ஏதோ ஒரு முடிவோடு எழுந்து நின்று நாயுடுவின் வரவை எதிர்நோக்கினாள். நாயுடுவும் ஆவலோடு உள்ளே நுழைந்தார். நாராயணி அவர் முகத்தை ஏக்கத்தோடு பார்த்தாள்.

''வந்து விட்டேன் நாராயணி ! நான் எங்கும் போகவில்லை. பக்கத்து அறையிலேதான் இருந்தேன். நீ என் உறுதியைச் சோதிப்பதற்காகவே பிடிவாதம் செய்தாய் என்பதைப் புரிந்து கொண்டேன்'' என்று பல்லை இளித்தபடி அவளது பக்கம் வந்து நின்றார் நாயுடு. அவர் பேசி முடிப்பதற்குள்ளாக நாராயணி அவரது கைகளைப் பிடித்துக்கொண்டு ''என்னை எப்போதும் வைத்துக் காப்பாற்றுவீர்களா?'' என்று திடீரெனக் கேட்டுவிட்டுத் தேம்பி அழுதாள்.

இதுபோன்ற வார்த்தை அவளிடமிருந்து வெளியாகும் என எதிர்பார்க்காத நாயுடுவும் திடுக்கிட்டார்.

''உண்மையாகவே கேட்கிறேன் - என்னை உங்களிடம் ஒப்படைத்தவனை - இன்றுமுதல் புருஷன் என்கிற நிலையிலே வைத்து நான் பூஜிக்கப் போவதில்லை. இனி நீங்கள்தான் எனக்குக் கதி ! நீங்கள்தான் எனக்குப் பதி ! நான் உங்களுக்கு மனைவியாக இருக்கும் பாக்கியம் பெற்றவள் அல்லதான் ! ஆனாலும், உங்கள் அடிமையாக இருக்கிறேன். மீண்டும் அந்தப் பாவியின் கையிலே ஒப்புவிக்காமல் இருப்பதாக எனக்கு வாக்குக் கொடுங்கள்.''

நாராயணியின் கோரிக்கை எதுவாக இருந்தாலும் நிறைவேற்றுவேன் என்று சொல்லித் தீரவேண்டிய நேரம் அது !அதனால் நாயுடு தலையசைத்தார் !

''துண்டுக் கரும்பு கேட்டவனிடம் தோட்டத்தையே எடுத்துக்கொள் என்பது போல் இருக்கிறது நாராயணி, உன்

பேச்சு !'' என்ருர். பிறகு வென்ருர். கிருஷ்ணய்யர் மறுபடியும் கோயில் குருக்களானுர். திருட்டுப்போன நகைகளைப் பற்றிச் சரியான புலன் கிடைக்கவில்லை என்று போலீசாரும் அறிவித்துவிட்டனர். காலை முதல் அர்த்தஜாமப் பூஜை வரையிலே கிருஷ்ணய்யருக்குக் கோயிலிலே வேலைதான். இரவு இரண்டு மணி வரையில் தினந்தோறும் பக்தர்களுக்குப் பிரசங்கம் செய்வார். அதற்குமேல் கோயில் மண்டபத்திலேயே படுக்கை, உறக்கம் எல்லாம் ! நாயுடுவுக்கும் நாராயணிக்கும் ஒரு குழந்தை பிறந்து, பிறந்த நாலாம் நாள் நல்ல வேளையாக அது இறந்துவிட்டது. அது உயிரோடு இருந்திருந்தால் ஒருவேளை நாயுடுவின் தொடர்பு அறுந்திருக்கலாம். நாராயணி, கிருஷ்ணய்யர் என்று தனக்கு ஒரு நாயகன் இருந்ததையே மறந்துவிட்டாள்.

தர்மகர்த்தா ஒரு நாள் ஊரில் இல்லை என்ற செய்தி கிருஷ்ணய்யர் காதுக்கு எட்டியது. நகரசபைத் தலைவர் தேர்தலுக்காக ஏழெட்டு உறுப்பினர்களை விலைக்கு வாங்கி எங்கேயோ ஒரு கடாரம் பத்திற்கு ஓட்டிக்கொண்டு போய்விட்டார் என்றும், திரும்ப இரண்டு நாட்கள் ஆகும் என்றும் அய்யர் கேள்விப்பட்டார்.

நாராயணியைப் பற்றிய பழைய நினைவுகள் அய்யரைக் குடைந்தன. நாராயணியை நாயுடுவிடம் அர்ப்பணிக்காமல், ஜெயிலுக்கே போயிருந்தாலும் பரவாயில்லையே ; ஜெயில் என்ன இந்தக் கோயில் மண்டபத்தைவிடவா மோசமாக இருக்கப் போகிறது? என்று தனக்குத் தானே வருந்திக்கொண்டிருந்த அய்யருக்கு, எப்படியும் நாராயணியை ஒரு முறை சந்தித்துவிட வேண்டும் என்ற ஆசை பிறந்தது. அந்த ஆசையை நிறைவேற்றிக்கொள்ளத் தக்க சமயம் கிடைத்ததாக எண்ணிப் புறப்பட்டார்.

நாராயணி வீட்டுக் கதவைத் தட்டினுர். நாயுடுதான் வந்துவிட்டார் என்ற நினைவில் அவளும் கதவைத் திறந்தாள். அய்யர் எதிரே நின்ருர். நாராயணி அவரை உடனே வெளியேறுமாறு கட்டளையிட்டுத் தன் அறைப் பக்கம் போனுள். அய்யரும் அவளைத் தொடர்ந்தார். ''மரியாதையாகப் போய்விடுவது நல்லது !'' என எச்சரித்தாள் அவள். அய்யர் கெஞ்சினுர்.

''அன்றொரு நாள் கோயிலிலே முதன் முதலில் சந்தித்துக் கொஞ்சினீரே ; அந்த நாராயணியல்ல இவள் ! நாயுடு மனைவி - தர்மகர்த்தா நரசிம்மரின் உடமை !'' எனக் கர்ச்சித்தாள் அவள்.

''என்ன இருந்தாலும் நீ என் மனைவியல்லவா?'' அய்யருக்கோ தன் பசிக்கு எப்படியும் அவளை இரையாக்கித் தீரவேண்டும். அவளோ, எரிமலையாக இருந்தாள். அய்யரைச் சுட்டெரித்துவிடும் நெருப்புக் குண்டங்களாகக் காட்சியளித்தன அவள் விழிகள்.

''முடியுமா முடியாதா நாராயணி ?'' - முரட்டுத்தனமாக

அவளது கரங்களை இழுத்த அய்யரின் கன்னத்திலே நாராயணி 'பளார்' என அறைந்தாள்.

''நான் விபச்சாரிதான் அய்யரே; விபச்சாரிதான்! உம்மைப் போன்ற மனைவியை விற்கும் அரிச்சந்திரர்களின் மத்தியிலே என்னைப் போன்றவர்கள் எப்படிக் கற்போடு வாழமுடியும் ?'' நாராயணி பெருங்கூச்சலிட்டுப் பேசினள்.

''பத்து வருடச் சிறைவாசம்! அதைத் தாங்க உம்மால் முடியவில்லை ! பத்தினியின் உடலை விற்றீர் ! பகற் கொள்ளைக்காரனைப் போலப் பகவானின் சொத்தைத் திருடி, மனைவியைப் பரத்தையாக்கி, மானத்தை இழந்து, உயிரைக் காப்பாற்றிக் கொண்ட உமக்கு என்னை மனைவி என்று அழைக்க உரிமை இருக்கிறதோ ? தூ ! வெட்கங்கெட்ட மனிதரே ! போமய்யா போம் ! உமது பித்தலாட்டங்களைப் பிரசங்கம் என்று போற்றப் பக்தர்கள் இருக்கிருர்கள் அவர்களிடம் போம் !''

விரல் நீட்டித் தெருவழியைக் காட்டி நின்ருள் நாராயணி. அய்யரோ அவளை விடுவதாயில்லை. எப்படியும் அன்றைய தாகத்தைத் தணித்துச் செல்லவே விரும்பினர். எதிரே நிற்பது ஏதோ ஒரு மண் பதுமை என்ற எண்ணம்தான் இருந்தது நாராயணிக்கு !

அய்யர் அவளைத் தழுவிக் கொண்டார். ''தப்ப முடியாது நீ !'' என்று கரகரத்த குரலிலே கத்தினர். நாராயணிக்கும் அவருக்கும் சிறிது நேரம் கடும் போராட்டமே நடைபெற்றது. எப்படியும் விடுபட முடியாது எனக்கண்ட நாராயணிக்குத் திடீரென ஒரு யோசனை - நாயுடு, மேசையிலே ஒளித்து வைத்திருக்கும் கைத்துப்பாக்கி ! ஓடிப்போய் மேசையைத் திறந்தாள். துப்பாக்கியை எடுத்தாள்.

''டுமீல் ! டுமீல் !'' என ஒலி கிளம்பிற்று.

''அய்யோ ! அய்யோ !'' என்று அலறல்.

நாராயணி திகைத்தாள். அது அய்யரின் குரல் அல்ல நாயுடுவின் குரல்தான். ஓடிப்போய்ப் பார்த்தாள். நாயுடு அறைவாயிற்படியிலே சுருண்டு கிடந்தார். அய்யரோ எந்த ஆபத்துமின்றி கட்டிலுக்கடியிலே ஒளிந்திருந்தார். நாயுடுவைக் கொன்றுவிட்ட நாராயணி அவர்மீது விழுந்து புலம்பினள்.

நகரசபைத் தலைவர் தேர்தலைப் பற்றிய கவலையைக் கூட ஒதுக்கி வைத்துவிட்டு, அதற்குள் ஒருமுறை நாராயணியைப் பார்க்க ஓடிவந்த நரசிம்மநாயுடு எதிர்பாராத வகையிலே நாராயணியாலே சுட்டுக் கொல்லப்பட்டார். ஆனல் போலீசார் அப்படி வழக்குப் பதிவு செய்யவில்லை. அவர்கள் அய்யரை வீரராக்கிவிட்டார்கள். கட்டிலுக்கடியிலே ஒளிந்து மயங்கிக் கிடந்த அய்யர்தான் நரசிம்மநாயுடுவை சுட்டுக்கொன்று வஞ்சம் தீர்த்துக் கொண்டார் என்று தீர்ப்புக் கூறப்பட்டது.

ஆயுள் தண்டனை ! அந்தமட்டில் ஆண்டவன் நாராயணியின் துப்பாக்கி முனையிலிருந்தும் நீதி மன்றத்தின் தூக்குத் தண்டனையிலிருந்தும் தன்னை விடுவித்தானே என்று மகிழ்ச்சி அய்யருக்கு ! நாராயணியோ, அனாதையானாள், அய்யருடன் குடும்பம் நடத்திய வரையில் ''நாராயணி அம்மாமி !'' என்று ஊரார் அவளை அழைத்தனர். நரசிம்மநாயுடு பிரவேசித்த பிறகு, 'மிஸஸ் நாயுடு' என்று ஊர் கூறியது. இப்போது அவள், நடுத்தெரு நாராயணி ஆகிவிட்டாள். முன்பெல்லாம், நடுத்தெரு நாராயணி என்றால் அவள் இருக்கும் தெருவைக் குறிக்கும்—இப்போதோ?.. நடுத்தெருவுக்கு அர்த்தமே வேறு !

என்னதான் நாராயணியின் வாழ்க்கை கெட்டுவிட்டாலும் அவளது மனதிலே நரசிம்ம நாயுடுவுக்கு நல்லதோர் இடமுண்டு. அற்பபுத்திக்கார அய்யரைக் கொல்லப்போய் ஆசை நாயகனையல்லவா கொன்றுவிட்டாள். அவசரத்தாலும் - ஆவேசத்தாலும்! பாமாவினால் கொல்லப்பட்டதாகச் சித்தரிக்கப்பட்ட நரகாசுர வதைப் படல ஊர்வல ரதத்தைப் பார்க்கும்போது அவளுக்கு, தான் செய்த கொலைதான் ஞாபகத்திற்கு வருகிறது. அதனால் தான் தீபாவளி தினத்திலே அவள் அப்படி சோகமாக அமர்ந்திருந்தாள் போலும்.

---

**தமிழ்க்கனி வெளியீடுகள்**

# கலைஞரின் படைப்புகள்

1. ரோமாபுரிப் பாண்டியன் விலை ரூ. 25-00
2. மேடையிலே வீசிய மெல்லிய பூங்காற்று (அச்சில்)
3. புதையல் விலை ரூ. 15-00
4. கலைஞர் கருணாநிதியின் சிறுகதைகள் விலை ரூ. 10-00
5. கலைஞரின் கவிதைகள் விலை ரூ. 10-00
6. அரும்பு விலை ரூ. 5-00



தமிழின் பெருமையை — தமிழர் பெருமையை—சங்க காலம்—சோழர் காலத்துக்குப்பின் உலகம் போற்ற வேண்டும் என்ற கனவை நனவாக்க வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டு செயல்பட்டுக் கொண்டு வருகிற தலைவர் கலைஞர் ஒருவர்தான்.

தமிழைப்பற்றி நான் ஒன்றும் சொல்ல வேண்டாம். அவருக்கும் தமிழுக்கும் உள்ள உறவு:

அவரும் தமிழ்ப்புலவர், தமிழ்க் கவிஞர், தமிழ் எழுத்தாளர், தமிழ் கற்பனைவளம் பொதிந்தவர். தமிழை எழுதும் திறன் மிக்கவர்.

பழைய சங்ககால இலக்கியம் முதல் கோயில்களிலே விளங்குகின்ற சிற்பங்களைப் பார்க்கின்ற பொழுதெல்லாம் அவர் உள்ளத்திலே எழுகின்ற கற்பனைகள் பல.

அந்தக் கற்பனை பற்றி பல துணுக்குகளை நான் அறிவேன். எத்தனையோ கற்பனைகளைக் கண்டும் இருக்கிறார்கள்.

அந்தச் சிற்பங்கள் எல்லாம் அவருக்குப் பெரிய பெரிய காவியங்களாக விளங்குகின்றன. அவற்றை ஒட்டி அந்தக்காலம் முதற் கொண்டு இந்தக்காலம் வரையில் வளம்பெற்று இருக்கின்றன.

—டாக்டர் மு. வரதராசனார்.


தமிழ்
பதிப்பகம்
சென்னை


விலை
ஐந்து
ரூபாய்

